# ANURU VACHANAM

(MANI MIDAI PAVALAM)

## PART II

BY

N. S. KANDIAH PILLAI.

(Author of *Tamilakam, Pattuppattu Vachanam. Tamilar Charitiram etc* )

OTTRUMAI OFFICE.

THEAGARAYANAGAR, MADRAS.

1941 [Price Re. 1

**Rao Sahib S. VAIYAPURI PILLAI, B.A., B.L.,**
*Reader in Tamil, University of Madras.*

*To*

*The Manager,*
OTTRUMAI OFFICE,
*Theagarayanagar, Madras.*

MADRAS,
*17th October '40.*

Dear Sir,

Kindly accept my thanks for the two books you have been good enough to send me. The author, Mr. N. S. Kandiah Pillai has taken considerable pains in the preparation of the works.

Tamil-akam gives a collection of views of the many scholars who have written on the history of the Tamil country. It is no doubt a convenience to have the several views on the subject compiled in a single book.

Tamilar charitram (History of the Tamils) is more ambitious in its scope. It deals with the antiquity of the human race and takes the reader down to the age of Cilappadhikaram. It discusses briefly the relationship of the Sumerian and the Indus valley civilisation with the Dravidian civilisation. The Tamilian Society, their polity, their religion and their Literature are all briefly reviewed.

In such a vast undertaking, there is room for slips and we should be chary of criticising the author. There is also considerable room for sharp difference of opinion. But taking the book as a whole, I should say it is a useful publication.

*Yours sincerely,*

(Sd.) S. VAIYAPURI PILLAI.

# அகநானூறு வசனம்

(இரண்டாவது)

## மணிமிடை பவளம்


ஆக்கியோன் :

யாழ்ப்பாணத்து நவாலியூர்

திரு. ந. சி. கந்தையா பிள்ளை.

(தமிழகம், தமிழர் சரித்திரம், பத்துப்பாட்டு வசனம், பரிபாடல் வசனம், கலிங்கத்துப்பரணி வசனம், பதிற்றுப் பத்து வசனம், முதலியவும் பிறவுமாகிய பல நூல்களின் ஆசிரியர்.)



ஒற்றுமை ஆபீஸ்,

தியாகராயநகர், மதராஸ்.


 1941 [விலை ரூ. 1

# அகநானூறு வசனம்

## இரண்டாவது

## * மணி மிடை பவளம்

### 121 பாலை

**இது, தோழியாற் றலைமகளை உடன் வருமெனக் கேட்ட தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

*நாணமும் மகிழ்ச்சியு முடைய நெஞ்சே! முது வேனிற் காலத்துக கடிய வெய்யிலெறிக்கும். அதனாற் சிறுகுளம் வற்றிக கலங்கல நீருடைய தாயிருக்கும். அதனிடத்தே வெட்டிய சிறுகுழியிடத்தில் உண்ணமுடியாத கலங்கல் நீர் நிற்கும். வீரமுடைய ஆண்யானை அக்கலங்கல நீரால் கன்றுடைய இளம் பெண்யானையின் சிறியதலையைக் கழுவும். பின்பு செங்கோல் அறுகின் வெள்ளிய பூக்கள் சிதையும்படி அவற்றை அடித்துச்சென்று, வழியின் அருகே நிற்கும் ஆச்சாமரத்தில் தனது உடலை உரைஞ்சிச் சொறிதேய்க்கும். இம் மரத்தின்*

---

* "இபபெயர் உவமையாற பெறற பெயா செய்யுளும் பொருளும தமமுள ஒவ்வாமையால்."

ஐத நிழலில் (என்காதலி) கூட வந்து எம்மோடு தங்குவாளா? கொலை செய்யும் கணையுடைய மழவர், வழிப் போக்கர் கட்டிச் சாதம் கட்டிச் சென்ற பனை யோலையைப் பொறிக்கிடங்கு களின் மீது இட்டு வைப்பார். அவ்வோலைகளைச் சூறைக்காற்று எடுத்தலால் நேர்ந்த ஓசையை மானேறு, தன் பெண் மானின் ஓசை என்று கருதி அதனை அழைக்கும். அழகிய கண்களுடைய குரங்குகள் உறையும் இவ்வகையான கானத்திலே என்னுடன் அவள் செல்வாளென விசாலித்த மிருதுவான கண்ணையுடைய தொழி கூறினள். (தலைவி தங்கிச் செல்வாள் எனத் தோழி கூறினள் எனச் சேர்த்துக்கொள்க.) —மதுரை மருதனிள நாகன்

## 122 குறிஞ்சி

**இது, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.**

ஆரவாரம் மிக்க இம்முதிய ஊரிடத்தே மிக்க கள்ளையுண்ணும் மாந்தர் உறைவர். இம்மூதூரிடத்து விழாக்கள் இல்லையாயினும் அவர்கள் உறங்கார்கள் ஆவர். வளப்பம் மிக்க கடை வீதியிலும் பிறவீதி களிலு முள்ளவர்கள் உறங்கினாலும் வலிய பேச்சை யும் கடுஞ் சொல்லையுமுடைய அன்னை உறங்காளா வள். வீட்டில் வைத்து அரிய காவலைச்செய்யும் அன்னை துஞ்சினாலும் உறங்காத கண்ணையுடைய காவலர் குறுகுவார்கள். விளங்குகின்ற வேலையு டைய காவலர் உறங்கினாலும் கூரிய பல்லும் வல

மாகச் சுருண்டவாலும் உடைய நாய் துரைக்கும்; ஆரவாரஞ் செய்யும் வாயுடைய நாய் துரையாது அடங்கில் அகன்ற ஆகாச வீதியில் உள்ள சந்திரன பகல் போன்ற நிலாவைப் பரப்பி விரியும். சந்திரன மலையிடத்தே மறைந்து மிகக இருள வந்து நிறைக தாயின் வீட்டு எலியை உணவாகக் கொள்ளும் வலிய வாயையுடைய கூகை, பேய்கள் உலாவும் யாமத்தில் அச்சந்தருமபடி குழறும். [illegible] மரப் பொந்துகளை விரும்புகின்ற கூகைச் சேவல் குரலடங்கி யடியின வீட்டுக் கூரையிலிருந்து கோழிச்சேவல் கூவும். இவை எல்லாம் அடங்கிய காலத்தும் ஒரு நாளும் என் நெஞ்சை விட்டுப் பிரி காத என் காதலர் வாரார். அதனால் பருந்தலைச் சக்கரங் கள் உள்ளிட்ட சதங்கைகள் ஒலிக்க மிக வேகமாகப் பாய்ந்து செல்லும் குதிரைகளையும், [illegible] யையுமுடைய திதனது உறையூரைச் சூழ்ந்த கல லுகள் மிகவுடைய புறங்காடு போன்ற பல இடை யூறுகளை யுடையதாயிருந்தது எங்களது கள வொழுக்கம். —பரணர்.

## 123 குறிஞ்சி

**இது, தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

நெஞ்சே! கேட்பாயாக: உறுதியான விரதமுடைய ஆன்றோர் உண்ணாமையின் வாடிய மருங்கினையுடையவராவர். மலையிடத்துள்ள சிறு வழியிடத்துக் கூட்டமாகச் செல்லும் காட்டுயானைகள்

அவ்வுண்ணு நோன்பினர்போல அழகு கெடும் குன்றைக் கடந்து பொருள் பெறவும் மாட்டாய். அழகிதாக ஐவகையாகக் கோதிப் பின்னி முடிந்த கூந்தலுடையவளது நல்ல மார்பைச் சேர்ந்தபின் வறுமையை அஞ்சி வருந்தி உடைகுவை.

பெருங் கொடையுடைய கோசர், நிலவுபோல் விளங்கும் நெய் பூசிய வேலையும், மழைமுகில் போன்ற பல பரிசைகளையுமுடையர். அக்கோசரது, மூவகிலை அழிக்கும் காவிரி கடலோடு சங்கமிக்கின்ற துறையிடத்துப் பெரிய கடல்நீர் இருலோடு வந்து பூவோடு பெயரும். அதுபோல சென்று தேடப் படும பொருளை நீ ஓரிடத்திற் கொள்வாய்.

—காவிரிப்பூம் பட்டினத்துக்காரிக கண்ணனார்.

## 124 முல்லை

**இது, தலைவன் தேர்ப்பாகற் குரைத்தது:**

பகைவர் யானையோடு நல்ல ஆபரணங்களையும் கொண்டுவந்து வணங்கித் துதித்து திறைகொடுககச 'செல்லுக' என்பனாயின், அரசன், நிலம கொள்ளாது நெருங்கிய சேனையோடு இன்றே புறப்படுவான். அது உண்மையாகும்.

பெரிய வீட்டிடத்து மாடத்தே சிறந்த படுக்கையிடத்து, எனது வருத்ததகதைத் தீர்க்கும் நன்மையுடைய என் காதலி, இனிது உறைவாள். யான் பாசறையிடத் திருந்த வருததம் நீஙகும்படி மின்

நிமிர்ந்தாற்போன்று பொன்னு லலங்கரிக்கப்பட்டனவும், தேரிற் பூட்டப்பட்டனவும், மட்டஞ்செய்த பிடரி மயிருடையனவும், கையைப் பறிக்கின்றனவுமாகிய குதிரைகளை, பெரிய மழைக்குத் தழைத்த பசிய முல்லைக்கொடியின் விரிந்து கமழ்கின்ற பூக்களை ஊதும் வண்டுகள் ஓடும்படி காலையிற் செலுத்துவாயாக; மாலைக்காலத்தில் காவலரது முழவு ஓசை பெரிய நிலாமுற்றத்துக் கேட்கின்றதும், நிரையாகி எய்து மறையும் பதுக்கிடங்களையுடைய நீண்ட மதிலாற் சூழப்பட்டுள்ளதுமாகிய ஊரை அடைவேம்.

—மதுரை அறுவை வாணிக னிளவேட்டனர்.

## 125 பாலை

**இது, தலைமகன் வினைமுற்றி மீண்டமை தோழி புணரத் தலைமகள் சொல்லியது:**

மதயானையை ஒத்த முகிற்கூட்டங்கள் பெரிய மழையைப் பெய்யும். அதனல் பெரிய முத்துப் போன்ற பெரிய அரும்பு முதிர்ந்த இண்டங்கொடியின் ஆலாங்கட்டிபோன்ற வெள்ளிய பூக்கள் உதிரும். மெல்லிய வாலுடையஒந்தியின் தாடிபோலத் தாது நிரம்பிய கொழுமையான குவளை மலர்கள் முறுக்கவிழும். மழை பெய்த முகில்கள் மதமடங்கிய யானையைப்போல், பெய்து வறிதாகி விசும்பின் திசைகளில் உயர்ந்து செல்லும். வாடைக் காற்றே! பனி பெய்கின்ற நடுயாமத்திலே அரத்தினல் அறுத்துச் செய்த வளைகழலும்படி தோள்

நெகிழ நிரம்பாத வாழ்க்கையினராய் தனி உறைவோரின் தன்மையை ஆராயாது, என்னைக் கோபித்து வருத்தினை. கைதொழூம் முறைமையுடைய கடவுள் பொருட்டு வினைவயிற் பிரிந்த நங்காதலர் விரைவில் வருவாராக. கரிகாற் பெருவளத்தான் விரிந்த தலையாட்டம் விளங்கும் கதியுடைய அச்சந்தரும் குதிரைப்படை யுடையன். அவனை எதிர்ப்போர் என்றும் வாகை சூடார். அவனைப் போர்க்களத்தே வெல்லும்படி எதிர்த்த ஒன்பது அரசரது குடையையும, அவன் ஒரு பகலில் ஒழித்தான். எனது காதலர் வருவாராயின், நீ, அவ்வாறு தோற்ற பெருமையில்லாத மன்னர் போல எம்மிடத்தில் நில்லாது ஓடுவை.

—பரணர்.

## 126 மருதம்

**இது, உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:**

நெஞ்சே! நீ பேசாதிருந்து பலவற்றை நினைந்து பெரும் வருத்தம் உடையையாய் வருந்தாதி. பெரிய காவிரியாறு மலையினின்றும் இழிந்துவரும். அதன் குளிர்ந்த நீர்த்தலை, புதிய மலரைத் துறையிடத்துக கொண்டுவந்த கடற்கரையை வருத்தும. அவ்வாறு இருளுடை யாமத்திற கலங்கும்படி மீன் பிடிக்கச் சென்ற பாண்மகளின் தந்தை விடியற்காலையில் திரண்ட கொம்புடைய வாளைமீனைக் கொண்டு வரும். வளைந்து சுழித்த கொப்பூழும் இனிய வார்த்தையு

முடைய அப்பாண்மகள் நீண்ட கொடி யசையும் கள்ளுக்கடைகள் உள்ள வீதியில் வாளைமீனை விற்று அதன் விலைகருப் பழம் நெல்லையும் கழங்களவு பெரிய முத்துக்களையும் நல்ல ஆபரணங்களையும் பெறுவாள். இவ்வாறு பயன்தரும் ஊரையும் பல வேலாட் படையையுமுடைய எவ்வி பல நல்ல வார்த்தைகளைக் கூறி வன்னியை அடக்க முயன்றான். அதற்கு அடங் காத வன்னி, பொன்போன்ற பூங்கொத்துடைய புன்னை மரத்தை வெட்ட விரும்பித் திதியனோடு பொருது தோல்வி யடைந்தான்.

நெஞ்சே! கிளிபோன்ற மழலை மொழியும், பெரிய கயல்மீனை போன்ற கண்ணும், மேகம் போன்று முதுகிடத்தே தூங்கும் விளங்கும் கரிய ஐம்பாலாய்க் கோதிமுடிநத கூந்தலும், மின்னை ஒத்த இடையுமுடைய இச் சிறியவளின் பின் நிற்றலை விரும்புகின்றாய். நீ வன்னியைப்போல் அவமதிக்கப்படுவை. —நக்கீரர்.

## 127 பாலை

இது, பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற் புறுத்தியது.

விளங்கும் வளை கழலும்படி சோர்ந்து தினமும் கலங்கித் துன்பமெய்தி நாம் இவ்விடத்தே தங்கு கின்றேம்.

வெற்றி முரசுடைய சேரலாதன் கடலிடத்தே சென்று கடம்பை வெட்டினன்; முன்னோர் மயங்

கும்படி இமயத்தில் விற்பொறியைப் பொறித்தான்; நல்ல மாந்தைநகர் முற்றத்தில் பகை அரசர் பணிந்து திறையாகக் கொடுத்த பெருமைபொருந்திய ஆபரணங்களையும், பொன்பாவையையும் வயிரங்களையும் ஆம்பல் என்னும் எண் அளவாகப் பெற்றான். பெற்று அவற்றை நிலந் தின்னும்படி விட்டு உயிர் துறந்தான்.

உனது குற்றந்தீர்ந்த காதலர், அந்நிதிபோன்ற பொருளை ஒருநாளிற் பெறுவதாயிருநதாலும் தரிக்க மாட்டார். அவர் சென்ற நாடு சிவநத கொம்பும கரிய அடியுமுடைய ஆச்சாமரத்தின் மெல்லிய பூங் கொத்தைச் சுருண்டமயிர் நிறையச் சூடி மளளர் வில்லைப் பிடித்து வழிப்போககரைப் பார்த்திருக் கும அஞ்சத்தகக கவர்பட்ட வழியுடைய யிடத்ததும் வேறு மொழி வழங்குவதுமானது. அவர் அத் தேயத்தவராயினும் வரும்காலத்திற் பிநதமாட்டார்.

—மாமூலனார்.

## 128 குறிஞ்சி

**இது, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொலலு வாளாய்ச் சொல்லியது.**

தோழிகேட்பாயாக: வீதி ஓசை அடங்கினது. மனையிலுள்ளவர்கள் உறங்கினார்கள். கொலைஞர் போன்ற கொடுமையோடு இன்று யாமம வரின் காமம் மிகுந்து கடலினும் பரந்து கரைகடக்கும். யான், அவர் இரவில் வரும் இடையூற்றை அஞ்சிப்

பொறுத்திருப்பவும் எனது நெஞ்சு என்னையும் உன்னையும் கேளாதாயிற்று. என் காதலன், குறுங்காடுடையதும் இருண்டு செல்லுதற்கரியதுமாகிய மலையில் உள்ள சிறிய சுனையிடத்துக குவளைமலரை வண்டு படும்படி சூடிவருவான். அவன் வரும் வழி ஒடுங்கி யானை கட்டுங் கயிறுபோன்று பாறையிடத்துள்ளது. அவர் மாரிமழை பெய்து நீர் ஓடும் கடத்தற்கரிய படுகுழியில் இருளிடை மிதிப்பதை நோக்கி (என் நெஞ்சு) அவர்தளர் அடிதாங்கச் சென்றது. அப்படி என நெஞ்சு உன்னையும் என்னையும் கேளாமற் போவானேன்? —கபிலர்.

## 129 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.**

நடுயாமத்தே நின்னை வருந்தும்படி விட்டவர் நின்னை மறநது உறைதல் எப்படி? காட்டிடத்தே கிளைகளுடைய பெரிய மூங்கில் உதிர்த்த நெல்லை நோககி ஆண்மான் புல்மேய்தலை மறந்து நின்று தன் பெண் மானை அழைக்கும், பாறையிடத்தே வாயுடைந்த தாழியிடத்தில் செழித்து வளர்ந்த கொழுவிய இலையுடைய பருததியின் ஊதிய வயிறுடைய இளங்காயைப் பட்சிச் சேவல் பெடைகரு ஊட்டு தற்குப் பிளக்கும். குருவிபிளந்த வெண் பஞ்சை வறிய பெண்டுகள் அல்குலுக்கு ஊட்டுவர். இவ்வாறுள்ள சிறிய ஊரிலுள்ளார் போரிஞற் கலங்கிக் கையைத்தலையிடத்தே வைக்கும்படி கூரிய

ஆயுதங்களையுடைய மழவர் மதிலின் உட்புறத்துள்ள வற்றைக கொள்ளையடித்துண்டு செருப்புத் தொட்ட பாதத்தினராய்ச் சுனையிடத்து நீர் பருகுவர். அழகிய கூந்தலுடையவளே! இவ்வகையான அருஞ்சுரம் செல்லற்கு அரியது என்னாது, அழகிய ஆபரணங்களும், பெரியதோளும, தேன் நாறும் கூந்தலும், குவளைமலர் போன்ற கண்ணு முடைய உன்னோடு உடன் போக்கிற்குக் கருதினரென்று அவர் நமககுந் சொன்னர். ஆதலின் எல்லாம் முடிந்தபின் உள்ளல் வேண்டும்.

—குடவாயிற் கீரத்தனார்.

## 130 நெய்தல்

**இது, கழறிய பாஙகற்குத் தலைமகன் கழற் றெதிர் மறுத்தது :**

நண்ப! கேட்பாயாக, உயர்ந்த மணலுடைய கரையிடத்தே சிவந்த தண்டும், சிவந்த தாதும் உள்ளே யுடையதாகிய கொழுவிய தாமரைமுகை வளரும். அதன்பககததே அசசந்தரும் தலையும் சொறி அரையுமுடைய தாழை வளரும். அவை பூத்த பூக்கள் விரிந்து அவ்விடத்துளள புலால் நாற்றத்தை அழித்து மலர்மணங் கமழச் செய்யும். நல்ல தேரையுடைய பாண்டியனின் இவ்வாறான நல்ல துறையின் கழியிடத்தே வண்டு வாய் திறகக விரிந்த நெய்தல், கண்ணுக்குத் தோற்ற மாதின் ஒளிவீசு முகத்தை முன்னின்று கண்டனராயின இவ்வாறு கூறமாட்டீர். —வெண்கண்ணனார்.

## 131 பாலை

**இது, பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது:**

நெஞ்சே! பெரிய தாளுடைய இண்டங்கொடி ஆகாயத்தை முட்டும்படி வளர்ந்திருக்கும். அதன் பசிய மெல்லிய இலையின் அருகுபோல வளைந்த கூந்தலும், வண்டு ஊத மலர்ந்த குளிர்ச்சியுடைய மாலையும் உடைய இவளினும் ஈதல் நமக்குச் சிறந்ததென்றாய்.

கொடிய சுரத்தே மழவர், சிள்ளென்னும் ஓசையுடன் செல்வதும் குறி தப்பாததுமாகிய அம்புமுடையராய்ப் பகற்காலத்தே நிரைகளைக் கவர்ந்து செல்வர். செல்லுமிடத்து நிரையை மீட்கவந்த (கரந்தை) வீரர், நிரை கவர்ந்தோரை எதிர்த்துப் போர்செய்து நடை மெலிந்த கன்றுகளின் கடைக் கண்ணீரைத் துடைப்பர். அவ்வாறு பொருதுபட்ட வீரரின பெயரும் பெருமையும் எழுதி வழிதோறும் நாட்டிய கற்கள் மயிலிறகு சூட்டப்பெற்று நிற்கும். அதனைச் சுற்றிச சாத்திய பரிசைகள் பகைவேந்தரின் போர்க்களம்போலத் தோன்றும். இவ்வாறு அஞ்சத்தக்க கொடிய கானத்தே நம்மோடு வருக என்று கூறுவாயாயின் யான் வரமாட்டேன். உனது முயற்சி நன்றாவதாக!

—மதுரை மருதனிள நாகனார்.

## 132 குறிஞ்சி

**இது, தோழி தலைமகனை இடத்துய்த்து வந்து தலைமகன் எதிர்ப்பட்டு நின்று வரைவு கடாயது:**

பெருந்தகாய்! தினையின் முற்றி விளைந்த கதிர்களைக் கொய்தனர். நோய் மிகுதலால், தோழியர் புனைந்த இவளின் அழகு கெட்டது. அவளின் அழகழிந்த நெற்றியைநோக்கி இவ்வூரும் வருந்தத் தக்கவற்றைக் கூறும். இக் குன்றிடத்துள்ள கானவர், களிற்றின் முகத்தைத் திறந்த அம்பும், வெள்ளிய நிணமாகிய உணவுமுடையர். அவர்களின் தங்கையும், அழகிய பெருத்த மிருதுவாகிய தோளும், ஆய்ந்த பூவிதழ் போன்று குளிர்ந்த கண்ணும், ஒடுங்கிய சாயலும் உடையவளும் ஆகிய கொடிச்சியை மணப்பாய். அழகிய ஆரம் அணிந்த மார்பனே! மழை பெய்யப்பெற்ற பக்க மலையிடத்துள்ள சுனையிடத்துள்ள நீர்ப்பூவைக குறுகிய சிறகுடைய வண்டு அவிழ்க்கும்; பின்பு வேங்கையின் விரிந்த பூங்கொத்தை ஊதிக் காந்தளின் தேனுடைய குவிந்த மலரிடத்து உறங்கி யானையின் பெரிய கன்னத்திலுள்ள மதத்தே செல்லும். இவ்வகையான பெரிய மலையை வேலியாக உடைய உனது உறைவிடமாகிய ஊருக்கு அவளை மணந்து கொண்டு செல்வாயாக.

## 133 பாலை

**இது, பிரிவிடை ஆற்றாளாகக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது:**

பருக்கைக் கற்கள் நிறைந்த வன்னிலத்தே எழுந்த புழுதி காலையில் மலர்ந்த வேங்கைப்பூக்கள் மீது படிந்து வரியை உண்டாக்கும். இவ்வகையான

மரங்கள் நிற்கின்றவும் பசிய பற்றைகள் உடையவுமாகிய முல்லைநிலக் காட்டில், மழைபெய்த முகில், வில்லு எறிந்த பஞ்சுபோல வெண்ணிற முடையதாய்த் தவழும்.

இவ்வகையான புதுக்கொல்லையுடைய குறிய மலையின் பககத்தே, கருமை பரந்தாற்போன்ற காயா மலர்களோடு தீசசுடர் படர்ந்தாற் போன்ற இலவின் மலரைச் சுமந்து இனிய நீரையுடைய காட்டாறு ஓடும். அவ்வாற்றின் வெள்ளிய துளிகளைக காற்று வீசுதலின் குன்றிமணி போன்ற கண்ணும், வெள்ளிய மயிரும், குறுகிய தாளும், தாடியுமுடையதுமாகிய ஆண் வெள்ளெலி யிருந்து உண்ணும்.

சிவல் எனனும் பட்சியின் போர்முள்ளை ஒத்து முற்றிய முகையுடைய வெட்சியும, குருநதும் பாறையிடத்தே வளர்கின்ற காவலுடைய காட்டிடத்தே செல்கினற வழியிடத்தே செருககி வளர்ந்த மரலை, முறுகிய கொம்புடைய மானும் அதன்பிணையும் நின்று கறிக்கும். தோழி! இவ்வகையான காட்டைக கடந்த எனது காதலர் இவ்வகையான வழியால் எமமோடு வரவில்லையோ? என்று என்னை வினாவினர்.

—உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

**134** முல்லை

**இது, வினைமுற்றி மீண்ட தலைவன் பாகற் குரைத்தது.**

வானம் மழை பெய்தது. கானம் அழகு பெற்றது. சூல் முற்றிய மேகம் மழைபெய்தலும் காயாம்

பூவின் இடை யிடையே சிவப்புநிறத் தம்பலப்பூச்சி பரந்து கிடந்தது. முல்லைமலர் கழற்கொடியோடு பரந்து கிடந்தது. அத்தோற்றம் ஓவியவல்லான் வரைந்த சித்திரம்போல விருக்கும். இவ்வகையான சிவந்த முல்லைநிலத்தில், தேர்ப்பாகனே! தாவித் தாளம்போட்டுப் பாய்ந்து செல்லும் மனம் செருக்கிய குதிரைகளின் கால்கள், இவ்விரண்டாக ஒதுங்கி இடிபோல ஓசைசெய்தலைக் கவனியாது வேகமாகத் தேரைச் செலுத்து.

ஆண் மானின் கொம்பு, குவிந்த முகையுடைய வாழையின் பெரிய பூ உதிர்ந்த தண்டுபோல் முறுகி இருக்கும். இவ்வகையான கொம்புடைய ஆண் மானோடு திரண்ட காலுடைய பெண்மான் விரும்பிச் சேர்ந்து உறங்கும். அவை எங்கள் தேரின் ஆரவாரத்தைக் கேட்பின் உச்சிப்பொழுதில் சேர்ந்து நிற்றலும் உண்டோ? —சீத்தலைச் சாத்தனார்.

## 135 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது:**

தோழி! எனது தளிர்போன்ற மேனியின் பொறியுடைய மாமை நிறத்தினால் உண்டாகிய அழகு அழிந்தது; புதரிடத்தே படர்ந்த பீர்க்கின் மலர்போல நெற்றியிடத்துப் பசலை பரந்தது. மை எழுதிய அழகிய குளிர்ந்த கண்கலங்க வருந்திய ஆதிமந்தியைப்போல் அறிவு வேறுபட்டு வருந்து

கின்றேன். இவ்வாறு யான் வருந்தும்படி என் காதலர், வெய்யில் கடுமையாயெறித்தலின், காற்று மிகவும் வீசித், தளிருடைய இருப்பையிற் சேர்ந்து குவிந்த பூவை பாறையிடத்தே உதிர்த்து யானைத் தந்தத்திற் கடைந்த கழங்குபோல பாறையிடத்தே பரந்துகிடக்கச் செய்யும் காட்டைக் கடந்து சென்றார். போரில் வெற்றியும், மாயாத பெரிய புகழும் வானை முட்டும் பெரிய தலையுமுடைய பதினெண் வேளிரும் ஒருமித்துச் சென்ற கழுவுள் என்னும் இடையர் அரசனின் காமூர்போன்று அவரை நினைந்த என் நெஞ்சு அழிந்தது. —பரணர்.

## 136 மருதம்

இது, உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:

நன்றாகக் குற்றமின்றிச் சமைக்கப்பட்ட வெள்ளிய சோறு மேலானவர்களுக்குக் குறைய அளிக்கப்பட்டது. புள்ளும் நல்ல சகுனம் காட்டினது. பெரிய வானம் களங்கமற்று விளங்கினது. திங்கள் உரோகிணியோடு சேர்கின்ற (பூரணையாகிய) குற்றந்தீர்ந்த முகூர்த்தம் வந்தது. அழகியமனை அலங்கரிக்கப்பட்டது. பெண்கள் கடவுளைத் தொழுது மணமுரசு ஒலிக்க மணப்பெண்ணை நீராட்டினர். அப்பெண்கள் பூவிதழ்போன்ற தங்கள் கண்ணால் மணப்பெண்ணை இமை கொட்டாது மறைய நின்று பார்த்துக் கொண்டு நின்றனர். பந்தரிடத்தே மெல்லிய பூவுடைய வாகையின் கவர்பட்ட இலைமீது, முதிய

கன்றுகள் நின்று கறிப்பதும், குழியிடத்து நெருங்கி வளர்வதும், தழங்கும் ஓசையுடைய வானம் முதற் பெய்த மழைக்குப் பிடித்ததும், கழுவிய நீலமணிபோன்ற இதழும் முகையுமுடையதுமாகிய அறுகைக் கிழங்கோடு பிடுங்கி வெண்ணூல் சுற்றிய கடவுள் வைக்கப்பட்டிருந்தது. பந்தரிடத்தே மழை பட்டாற்போன்று குளிர்ச்சியுடைய விரும்பத்தக்க மணல் பரப்பப்பட்டிருந்தது. மணப்பெண்ணுக்கு ஆபரணங்கள் நிறையப் பூட்டப்பட்டன. அச்சுமையை ஆற்றமாட்டாது களையினால் வியர்வை தோன்றினது. பெண்கள் விசிறி கொண்டு வீசிக் களையை ஆற்றினர். தமர் அவளை எனக்கு அளித்தனர். இவ்வாறு வதுவை செய்யப்பட்டவள் முதல்நாள் இரவில் விரும்பத்தக்க கற்பினால் என் உயிரை உடன்படுத்தி, அழகிய ஆடையால் உடல் முழுவதையும் மூடினாள். அதனால் வெப்பமுற்ற பிறை போன்ற நுதலிடத்துப் பொறி வியர்வை தோன்றிற்று. அதனை வீசுகின்ற காற்று ஆற்றும் பொருட்டுப் போர்வையை நீக்கினாள். அப்போது உறைகழித்த வாள்போல் தன்கண் இமைப்ப மறைக்கும் வகை அறியாது மெல்லெனத் தலையைக் குனிந்தவள், பெரிய மலர்ந்த ஆம்பல் மாலையைத் தடவி வண்டு ஒலிக்கும் அலங்கரிக்கப்பட்ட மலர்வேய்ந்த கரிய கூந்தலிருளில் ஒளித்தாள்.

—விற்றூற்று மூதெயினனார்.

**137 மாலை**

**இது, தலைமகள் பிரியுமெனக்கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது :**

காரமான களளுடைய உறந்தை, வென்று முழங்கும் வெற்றி முரசுடைய சோழரது. அவ்விடத்தே, புனல், இரண்டுகரையும நெரிந் தோடுகின்ற பெரிய ஆற்றின்கரையில் வெள்ளிய மணல பரநது கிடக்கும். அவ்விடத்துள்ள நறுமணம வீசும் குளிர்ந்த சோலையாகிய குறுங்காட்டில் ஆடவரும் மகளிரும் பங்குனி மாதத்தே கூடியிருநது முதுவேனிற் காலத்தை இனிமையாகக் கழிப்பர்.

இப்பங்குனி முயக்கத்துக்குப்பின் குறுங்காடு இலை யுதிர்ந்து செறிந்த மரங்களுடையதா யிருக்கும. இவ்வகையான காட்டிடத்தே வழிச்செல்லும் புதியோர் கேணியின் நீரை நெருங்கியிருந் துண்பர். பெண்யானையை அடைய விரும்பிய ஆண்யானை அககேணியிடத்திலுள்ள பிடியின் அடியைப் பின் தொடர்ந்து செல்லும். நின் காதலர் இவ்வியல்புள்ள காட்டுவழியே செல்ல விரும்பிற்றிலர். ஆயினும் அககுறுங்காட்டிற் கிடக்கும் தீயில்லாத அடுப்புப்போல நின்நெற்றி மிகவும் அழகழிந்தது. தென்கடல் அரசனும், துளையாத முத்துடையவனுமாகிய வலிய தேருடைய பாண்டியனது பககமலையிடத்தே நெடிய மூங்கில் வளரும். அம் மூங்கில்களை ஒத்து நின்ற தோள்களின் பழைய அழகும் தொலைந்தது. யான் வருந்துகின்றேன்.

—உறையூர் முதுசாத்தனார்.

## 138 குறிஞ்சி

**இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது:**

அன்புடைய தோழி! கேட்பாயாக. குவளை மலர்போன்ற கண்களில் பனிநீர் வார யான் வறிதே கவலையுற்றுச் சென்றேன். அதனைககண்ட அன்னை அதற்குக காரணம் பிறிதொன்ருயிருகக லாம் என்று ஐயங் கொண்டாள.

கடல்போன்ற தானையும நெடிய வேலுமுடைய பாண்டியன் வேப்ப மிலையையும குவளையையும் சூடிப் பகைவரை வென்ருன். அவனது பொதிய மலை உச்சியினின்று இழியும் அருவி ஒலிசெய்யும. அன்னை, அவ்வருவி ஓசைபோல் தாள அறுதியுடைய இனிய வாத்தியம் ஒலிக்கக கைதொழுது அழகிய மலையிடத்துளள முருகன் உறைகினற வேலை, மனையிடத்தே கொண்டுசென்ருள், சென்று கடம்பையும் (முருககடவுளின் பிணிமுகம எனனும்) யானையையும் வாழததினள; தொடுத்த மாலையும் பூவுங் கொண்டு விடியற்காலத்தே வெறியாடினள். அதனல் நன்மை உணடாயிற்ருே? எப்போதும் நின்னேடு பேசித தெளிநத நல்ல மலை நாடர் நடுயாமத்தே குறியிடதது வருவார். மலை உச்சியில் வழிதெரியாதபடி மிகவும இருண்ட இருளில் தனது மணியைக் ககிய நாகம், காந்தளின் கொழுவிய மடலுடைய புதுப்பூவை ஊதும் தும்பியின் அழகிய நிறத்தைககாணும. இவ்வகை இட

ருடைய வருத்தஞ்செய்யும் நீண்ட இடத்தை எனது நெஞ்சு நினையும்.—எழூஉப்பன்றி நாகன்குமரனார்.

## 139 பாலை

**இது, பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது:**

முகில் உறங்குவதுபோல இருளும்; விண் பிளக்க இமைப்பது போன்று மின்னும; மழையைக்கொண் டேறுவதுபோல் உரைஞ்சும், பூமியிலுள்ளவர்கள அஞ்சும்படி இடைவிடாது முழங்கி மழை பொழியும். இவ்வாறு மழைபெய்த கடையாமத்து, மழைபெய்து வறறிய வெள்ளை முகில்கள் வானைமுட்டும வரையிடத்தே வைகறைக காலத்தில் அசையும். வெய்யில பட்டுப் புதர்கள் விளங்கும காலைநேரத்தில் குளிர்ந்த நீரைக குடித்து அறுகம புல்லை மேயும வெள்ளிய முறுக்கிய கொம்புடைய ஆணமான வாரடித்த மணலின் ஒருபுறத்து, பூதத பிடவின் செறிந்த நிழலில் விருப்ப மிகுந்த பிணையோடு உறங்கும.

அரக்குநிறமுடைய வண்டுபோன்ற பல தம்பலப்பூச்சிகள், பரப்பி வைத்ததுபோல நீர்பாயும் மருங்கில் நீருக்கு அழகு செய்யும்படி பரந்து கிடக்கும். மேகம் கறுதது இடித்துப்பின் அக்கன்று செல்லும் காலத்தே தாம் வரும எனத் தலைவர் கூறிச்சென்ற பருவம் இது. அவர் இன்னும் வாராராயின் என் நுதலின் நிலை என்னாகும?

—இடைககாடனார்.

## 140 நெய்தல்

**இது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற் குரைத்தது :**

*பெரிய கடலிடத்து மீன் பிடிக்கும் சிறுகுடியிடத்துள்ள பரதவர், பெரிய கழியிடத்துள்ள வயலில பளிங்கு போன்ற உப்பு விளைவிப்பர். பெரிய கோலைக கையிலுடைய உமணர் அவ்வுப் பின் விலையைக கூறிகொண்டு வெடிப்புகளுடைய குன்றுகள கிடக்கும் வழியாற் செல்வர். இவ்வியல் பினராகிய உமணரது பெண், அழகியவாக விளங்கும வளைகள் ஒலிக்கக் கைவீசி நடந்து 'நெல்லுக்கு வெள்ளுப்பு' என்ச் சேரியிடத்தே விலை கூறுவள். இவ்வோசையைக கேட்ட வீட்டிடத்தே கிடந்த நாய் குரைகக அதனைக கேட்டுப் பயந்த அவள் கண்கள் போன்றன எனது கண்களும். கொல்லைக் காரன வேலைசெய்யும், புகையின் நிழல் போன்ற (கொல்லையின்) பெரிய சேற்றிற், புதைந்த வண்டியின் அகத்திற் தந்தை பூட்டிய எருது தளர்ந்து களை நீங்க மூச்செறிவதுபோல, யானும் நெடுமூச் செறியும்படி எனக்கும் நோயாகின்றது.*

—அம்மூவனார்.

## 141 பாலை

**இது, பிரிவிடை ஆற்றுளௌாங் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது :**

*தோழி கேட்பாயாக. உலகு முழுமையும் தொழில் ஓய்ந்தது. ஏர் உழாது துஞ்சிக கிடந்தது.*

மறுநீங்கிய விசும்பிடத் தெழுந்த பூரணசந்திர னிடத்து முயலாகிய மறு விளங்கினது. இவ்வகை யான பூரணசந்திரனோடு உரோகிணி சேருகின்ற தாகிய குற்றந்தீர்ந்த முகூர்த்தம் வந்தது. மூதூரிடத் துள்ள பலரும விளக்கேற்றி மாலை தூக்கிய பந்த ரின் கீழ் நெருங்கி யிருந்தனர். அப்போது மண வினை அயர்தற்கு அங்கே மிகவும் புலர்ந்த சாந்தும், தூய மலர் சூடிய மயிர்ச்சாந்து நாறுந் தண்ணிய நறுங்கூந்தலுமுடைய புது மணப்பெண் வருவாள். இவ்வாறு மணவினை அயர்ந்த புதிய மணப்பெண் அழகிய மனையிடத்துப் பலகோடுடைய அடுப்பி டத்துப் பால் உலையை வார்த்து வைப்பாள். அவள் சுருண்ட கூந்தலும வளையணிந்த கையுமுடைய சிறு பெண்களோடு பெரிய செந்நெல்லின் வளைந்த கதிரை முறித்து உரலிலிட்டு வயிர உலக்கையினால் அவலிடிப்பள் அச்சத்தத்துக்குப் பயந்த நிறைந்த சூலுடைய கொக்கு இனியபழக் குலையுடைய வாழை மரத்தின்மீது இராது நீண்ட அடியுடைய மரத்தின் மீதிருந்து குறும்பறை போன்று ஓசை செய்யும். இவ்வியல்புடைய நல்ல குடியிருப்பிலுள்ள மக்கள் குடி எழுந்து செல்வதைப் பெரிய புகழும் வெல்லும் போருமுடைய கரிகாற்சோழன் தடுத்தான். அவ னது இடையாறு போன்ற நல்ல புகழமைந்த செல் வத்தைப் பெறுதற்கு நங்காதலர் சென்றார்.

பல பொறிகளுடைய புலியின் நிறமுடைய வேங்கைப் பூவிடத்துப் பெரிய கிளையுடைய நாரத்

தையின் நறிய புதியமலர் உதிரப் பாறையிடத்தே கலைமான் துள்ளிக்குதிக்கும். இவ்வாறு வேங்கை மரத்தின் தேன் கமழுகின்ற பெரியமலை விளங்குகின்ற வேங்கடத்துள்ள சுரத்தைக் கடந்து அவர் சென்றார்; இனிய காட்சியும் அழகிய வினைமாட்சியுமுடைய நல்ல வீட்டிடத் துறையும் புள்ளும் (அன்னம மாடப்புரு முதலியன) இரவும் பகலும மிகவும் சேர்ந்துறையும். அதைககண்டு எனது நெஞ்சு மிகவும் மகிழ்ந்திருக்கும். —நக்கீரர்.

## 142 குறிஞ்சி

**இது, இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சுக்குச் சொல்லியது:**

நெஞ்சே கேட்பாயாக. பெரியதானையும் வெல்லும் போரு முடையவனாகிய **மாந்தரன் பொறையன் கடுங்கோ,** இலவின் மலர்போன்ற அழகிய சிவந்த நாவுடைய புலமை மிகுந்தோர் புகழுதலினால் பலரினும் மேலாக விளங்கும் இயல்பும், கொடுத்தலினாற் கவிந்த கையுமுடையவனாகிய வள்ளல். அவனைப் பாடிச் சென்றவர்கள் நல்ல ஆபரணங்களைப் பெற்று மகிழ்வதுபோல நெஞ்சே நீ மகிழ்வாயாக.

பாழி என்னும் ஊர் நீதி தவறாது ஆட்சிபுரியும நன்னனது. அப்பாழி ஊரிடத்து உணவு கொடுத்தற்கரிய அச்சந்தரும் பேய்கள்கூடி எதிர்கொள்ளும்படி மெய்மொழியுடைய ஞிமிலி, பருந்துகள் மகிழும்படி வெள்ளக்கணக்கான சேனையுடன் அதி

கனைக் கொன்றான். கொன்று வெற்றிகாரணமாக வாளைப் பிடித்து 'ஒள்வாள் அமலை' என்னும் வீரக் கூத்தாடினன். அப்போதெழுந்த ஆரவாரம் போலத் தோன்றும அலரை அஞ்சி, அவள், நீர் போன்ற அழகிய வெள்ளியாற்செய்த வளையணிந்த முன்கையும, ஆற்றிடைககுறையிலுள்ள கருமணல் போன்று முதுகிற் றுங்கும் கூந்தலும், ஆபரணங் களும் அசைய, கடல்மீன் உறங்கும் நடுயாமதது அழ கியபாவை நடை கற்பதுபோலப் பையப் பைய ஒது ங்கிவந்து, மலையிடத்துள்ள பூவினாற் கட்டிய மாலை யின் தாதுகள் பொன்னிறஞ் செய்யவும், தொடிகள் வடுப்படுத்தவும் யாழினும் இனிய மொழிகளைக கூறி முயங்கினாள். —பரணர்.

## 143 பாலை

**இது பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகனைத் தோழி தலைமகனது ஆற்றாமைகாரடு செலவழுங்கியது:**

வேனிற்காலத்தே வெய்யில் கோபித்து எறிக் கும். ஒல் என்று ஆடும் தேககமரக் கிளைகளிலுள்ள அகன்ற இலைகள் உதிரும். இவ்வாறு தேக்கமரங் கள் வளரும் பக்க மலையிடத்துக காய்ந்த புத ரிடத்தே தீ மூண்டு எரியும். அதனிடத்தினின்றும் எழுந்த புகை கொடிபோன்று எழுந்து வெடிப் புடைய மலையிடங்களிற் படரும். ஐயனே! இவ வகையினதாகிய கொடிய மலையிடத்துள்ள அரிய வழியைக கடந்து, பொருள் தேடற்கு எண்ணிய

எண்ணம் வரம்பு கடத்தலின், நீர், 'செல்வேன்' என்று கூறியவார்த்தையை அவட்குக் கூறினேன்.

சேரனது படைத்தலைவன் பிட்டன். அவன் விருமபத்தகுந்தவாறு வாழ்வோருக்கு ஆபரணங் களை அளிப்பான். அவன் பகைவரை வெட்டுவதிற் றவறாத வாளும் வீரக்கழலு முடையன். முகில் தவழும் சிகரமுடைய குதிரைமலை அவனுடையது. யான் அதனைக் கூறியபோது அம்மலையிடத் துள்ள சுனையிடத்தே நீர்த்துவலைபடும் குளிர்ந்த நறிய நீலம்போன்ற அவளது கண்ணிடத்தே, நீர் அரும்பிற்று. அதற்காக யான் வருந்துகின்றேன்.

—ஆலம்பேரி சாத்தனார்.

## 144 முல்லை

இது, வினைமுற்றிய தலைமகன் தன்னெஞ்சிற் குரைப்பா னாகிப் பாகற்குச் சொல்லியது:

நெஞ்சே கேட்பாயாக. நங்காதலிககு நான் வருவேனென்று கூறிய நாளும் பொய்த்தது. அவளது செவ்வரிபரந்த அழகிய கண்களிடத்தே நீரும் தங்கி நில்லாது விழும். குளிர்ந்த மழைககுப் பூத்த பசிய முல்லையின் கூரிய வாயையுடைய முகை மாலைக்காலத்தே அவிழ்ந்திருககும். அப்பூக்களைத் தொடுத் தணிதலால் எய்தும் அழகை அவள் கூந்தல் இழந்தது.

பாசறையிடத்தே திரியும் ஆண்யானை ஆகா யத்தில் இடி எழுந்து முழங்கினும் அதற்கு மாறாக

எழுந்து ஒலிக்கும். இவ்வகையான பாசறையிடத் துள்ள வீரர் கையிற்பிடித்த வாளின் பிடி நொறுங் கும்படி பகைவரை வெட்டிக் கொல்வர். அதனால் பெ ருகிய இரத்தம் குதிரைமிதித்த பள்ளத்தே தங்கி இடங்கள் தோறும நட்சததிரங்களைப்போல விட்டு விளங்கும். இவ்வாறு நாம் போரை வென்று பெற்ற செல்வத்தின் அளவைச் சுற்றத்தார் விரைந்து சென்று அவளுககுக கூறுவர். அப்பொழுது அள், "எம்மைப்பறறி நினையாதவரது அருளை மறககமாட் டேம். அநதியே! நீ கழிவாயாக," என்று சொல் லிப் புலம்பி யிருப்பாள. அவள அவ்வாறிருந்த பொதும அவர்கள் சொல்வதைக் கேட்டவுடன் குளிர்ந்த வாசமுடைய பூமாலை கசங்கும்படி நம் மோடு வருத்தமில்லாத மூயக்கத்தைப்பெற்றவள் போல மகிழுவாள்.

—மதுரை அளககர் ஞாழலார் மகனார்
மள்ளனார்.

## 145 பாலை

### இது, மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது :

காட்டிடத்தே வெண் ஞெமை காற்றுக்கு அசை யும். அதன் பக்கத்தே ஆளில்லாத அரியவழி செல்லும். அவ்விடத்தே வற்றியதும் பொன்னிற மான தலையுடையதுமான ஒதியமரம் வெய்யிலுக்கு வாடி நிற்கும். அதின் வேர்கள் காய்ந்தும் அடி கோறையுடையதாயும் இருக்கும். தேரின் மணி ஒலிப்பதுபோலச் சிள்வண்டு அதனிடத்து இருந்து

சத்தமிடும். வாள் போன்று கரிய வரிகளையுடைய புலியோடு போர் செய்தலால் புண்மிகுந்த யானை புள்ளி சிதைந்த முகத்தே இரத்தம் வடிய, உயர்ந்த மலையுச்சியில் இடிகரும் இடிபோல முழங்கும். இவ் வகையான செல்லுதற்கரிய வழியை, என்மகள், அன்புடையான் ஒருவனேடு கடந்து சென்ருளென்று கண்டார் கூறுகின்றனர்.

குறுக்கை என்னும் போர்க்களத்தில் நல்ல மிருதுவான பூங்கொத்துகளையுடைய (காவல் மரமாகிய) புன்னை நின்றது. அதனைப் பெரிய சிறப்புடைய அன்னி வெட்டினன். அதனுற் குற்றமடைந்த அப்புன்னையைப்போல அவர்கள் மிகுந்த குற்றத்தைப் பெற்றனர்.

இவள் தந்தையின் மனையிடத்தே களிப்புடைய மயில், யானையின் குரலுடைய பட்சிகளோடு நின்று ஆடும்; முழவு ஓயாது ஒலிக்கும். இவ்வாறு மகிழ்ச்சியோடு வாழும் வாழ்வும நெல்லுமுடைய தந்தையின் மனையிடத்தில், அடிகள் எடுத்துவைப்பினும் அவள் வருந்துவாள். ஐம்பாலாக முடிந்த சிறிய கூந்தலிடத்தே மலரைப் பிடுங்கிச் சூட்ட விடாமையால் சிறிய கோல் முறியும்படி அடிக்கவும் எனக்கு முதுகைக் காட்டி (ஓடாது) நின்ற எனது அழகிய கண்ணுடைய மயில்போன்ற சாயலுடையவளை என் கை வருத்தியது.

—கயமனர்.

## 146 மருதம்

**இது, வாயில் வேண்டிச் சென்ற பாணனுக்குத் தலைமகள் மறுத்தது :**

*மிருந்த வலிமையும் தலைமையுமுடைய எருமை ஏறு, குளிர்ந்த மலருடைய பொய்கையிடத்தே பொழுது சாயுமட்டும கிடக்கும். பின்பு எருமை நாகைச் சேர்ந்து சோலையினிடத்தே சென்று பின் வயலிடத்தே தங்கும்* இவ்வாறு ஆரவாரமுடைய ஊரனாகியஎமது தலைவரது ஒலிககின்ற மணியுடைய தேர் பிரகாசிக்கின்ற பரத்தையின் சேரியிடத்தே பல நாள் செல்லுதல் இயலாதாயிற்று. அப்பரத்தை இப்பரத்தனுடைய மொழியை என்னைப்போல நம்பிக், காற்று அசைத்தலினால் ஆடி நீர் சொரியும் மலரைப்போலக் கண் மார்பிடத்துத் துளிக்கும்படி பசப்படைந்தாள். ஆயத்தாரும் அயலாரும் இது என்ன புதுமை என்று மருளும்படியாக தாயராற் செய்யப்படும் அழகினை வேண்டாறானாள். இவ்வாறானவள் அழகிய பரத்தையருள் யாவளோ? அவள் இரஙகத்தககவளாவள். ஆதலால், பாண! அவளிடத்தில் நீ வாயில் வேண்டிச் செல்.*

—உவர்க்கண்ணூர் புல்லங்கீரனார்.

---

* எருமை எருது பொய்கைபிற கிடந்து, பின இள எருமையைத தழுவித தோப்பை அடைந்து அதன்பின் வயலிற் றஙகினாற் போலத தலைவன் சேரியில் பலநாள தஙகி அவாகளை நுகாந்து, பினபு ஒரு பரததையோடு சோலைகளில திரிந்து பின்பு வயல் போனறு இழ்ந்த எமது இல்லில் தஙகவந்தான் என்று உள்ளுறை கொளளுக.

## 147 பாலை

**இது, செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகன் சொல்லியது :**

உயர்ந்த மலையிடத்தே வேங்கைமரம் பிடவுடன் மலர்ந்திருக்கும். அதன் மணம் கமழ்கின்ற தழையைப் பிடுங்கி வேறு வேறாகப் போட்டாற் போன்று வளைந்த நகமுடைய பச்சைக்குட்டிகள் மூன்றை, மூடுக்காகிய கல்லுநிறைந்த குகையில், பெண்புலி ஈன்றது. அப்பெண்புலி மிகக பசியடைந்ததென்று பொறிகள விளங்குகின்ற பெரிய வாயுடைய ஆண்புலி இரைதேடச் செல்லும்; சென்று அறுத்துச செய்ததுபோன்ற கொம்புடைய ஆண்மானின் குரலை வளைந்த கவர்பட்ட நீண்ட வழியினிடத்தினின்று கேட்கும. இவ்வகையான வழியிடத்தே நங்காதலர் சென்றார். இவ்வாறு பிரிந்து சென்றவரின் பிரிவுககு அஞ்சி, வெள்ளிவீதியாரைப் போலச் செல்லப் பெரிதும் விரும்பினேன். இவ்வகையாகப் புலந்து உண்ணாத வருத்தத் தோடு உயிர் போகும்படி சோர்ந்து தோளும் பழைய அழகுகெட அதற்கு மருந்து காணமல் செயலற்றேன். (என்று செல வுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னாள்) —ஔவையார்.

## 148 குறிஞ்சி

**இது, பகல் வருவானை இரவு வருகென்றது :**

ஏந்திய கொம்புடைய யானை பனைத்திரள் போன்ற பெரிய விசாலித்த கையுடையது ; கொல்

லும் சினம் நீங்காத வலியுமுடையது; வண்டு மொய்க்கும்படி பாயும் மதமுடையது; அது குளிர்ந்த மணங் கமழுகின்ற மலைச்சாரலிடத்துள்ள மரங்களை முறியும்படி சாடி எதிர்ப்பட்ட புலி கதறும்படி குத்தி அதன் வெற்றியைப்போக்கும்; பின் சிறிய தானியமுடைய பெரிய புனத்தை அழிக்கும். இவ்வகையான நாட்டை உடையவனே!

விரைவாய் ஓடும குதிரையுடைய ஆய் எயினன் என்பான் உயர்ந்த தேருடைய ஞிமிலியோடு போர் செய்து களத்தே மடிந்தான். அதனை அறிந்த கூகை (பகற்குருடாதலால்) அவனைக் காணச் செல்லாது நாணிப் பகலிற் சஞ்சரிக்க மாட்டாதாயிற்று. அதுபோல இவட்குப் பகற்பொழுதிற் றுன்பம் பெரிதா யிருக்கின்றது. ஆதலின், நீர், மூங்கின் முளையை மேய்கின்ற பெரிய யானைகள் திரியும் மலைச் சாரலிடத்தே பாறையில், சிறிய ஆறு ஓடுகின்ற சோலையிடத்தே மாலை வருதல் வேண்டும்.

—பரணர்.

### 149 பாலை

**இது, தலைவன் தன் னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது:**

நெஞ்சே! சிறிய கறையான் நெடுங்காலம் முயன்று உயர்ந்த சிவந்த புற்றை எடுக்கும். அப்புற்றிடத்துள்ள ஒடுங்கிய இரையாகிய புற்றும் பழஞ் சோறாகிய இரையை உண்டு பெரிய கையுடைய

இருண்ட காடிக்கூட்டம் வெறுக்குமாயின், புல்லிய அரையுடைய இருப்பையின் துளையுடைய பூவைப் பொறுக்கி உண்ணும். இவ்வகையான நீண்ட வழியிடத்தே சென்று அரிதாக ஈட்டத்தக்க பொருளை எளிதாகப் பெறுவதாயினும வரமாட்டேன்.

சுள்ளி என்னும ஆறு, சேரலர்கரு உரியது. அவ்வாற்றின் வெள்ளிய நுரை கலஙகும்படி யவன ராற செலுத்தி வரப்பட்ட வேலைபபாடு சிறந்த நல்ல மரக் கலங்கள, முசிறிப் பட்டினத்தே பொன்னேடு வந்து மிள கோடு திரும்பிப் போதும. இப்பட்டினத்தை நெடிய யானைப் படையுடைய பாணடியன், ஆரவாரம் உணடாக வளைதுப் போரை வென்று, படிமத்தைக கவர்நது சென்றுன. அவனது கொடிகள அசை கின்ற வீதிகளுடைய மதுரைகரு மேற்கே பல புள்ளிகளுடைய மயிலின் வெற்றிககொடி உயர்ந்த தும், தவிராத விழா உடையதுமாகிய நெடியோனுகிய முருகனது திருப்பரஙகுன்ற முளளது. அவவிடத்தே வண்டு விழும்படி நெடிய ஆழமான சுனையிடதது நீலோற்பலம் பூத்திருககும். அமமலர் இரண்டின் பிணைகள் போன்ற தலைவியின் செவ்வரிபரந்த மதர்த்த கண்கள் கலங்கி வருந்தவிட்டு வரமாட்டேன்.

பொருளைப் பெறுவதாயினும கண் கலங்கி வருந்தவிட்டு வரமாட்டேன் என வினைமுடிவு செய்க.

**150 நெய்தல்**

**இது, பகற்குறி வந்து களவுற்று நீங்கும் தலைமகனைத், தோழி, தலைமகளை இடத்துய்த்துச் செறிப்பறிவுறுத்தி வரைவு கடாவியது :**

*ஆய் ஆனவள், என் தோழியின் பின்னல் விட்டதனால் வளர்ந்த கூந்தலையும், மார்பிடத்தே பொன்போல அரும்பிய அழகு தேமலையும், கச்சு அறும்படி முகம் தோற்றி விம்முகின்ற முலைகளை யும் நோக்கினள், பெரிதும வாடினைய என்று பல மாண்புகளாக கூறினள். அவள் தோளகளைத் தழுவினள். நெடிதாக நினைந்தாள். பினபு அரிய காவலைச செய்தாள். மாலை அணிந்த மார்பனே! நீ பிரிந்து செல்லுமபோதெல்லாம் தோழி, விரைநது திரியும் கொடிய சுறுமீனுடையதும் சஙகுகள மேய் கின்றதுமாகிய துறையை நோககுவாள். நெய்தலின் நீலமணிபோன்ற இதழுகள் மாலையிற் கூம்பும் காலைப் பனியால் நனைககப்பட்ட செருந்தியோ காவியும் வாயவிழும. இவ்வகையான கழியையும் கடற்கரைச் சோலையையும காணுந தோறும் 'நம் தலைவர் இனி வரார் போலும' என்று அவள் வெறுத்து வருந்துவாள். —முழூவழூதியார்.*

**151 பாலை**

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி சொல் லியது :**

*தோழி கேட்பாயாக. நந்தலைவர் சோதிடம் கூறும் வாயையுடைய பல்லி வாழும் காட்டிலே*

சென்றார். அவர், தம்மை விரும்பி உறைகின்றவர்களைப் பாதுகாத்துத், தாம் விரும்பி இனிமையாக அளவளாவிய நட்பினரோடு இன்பமுறக கலந்து மகிழமாட்டாதவராவர் வறியோர் எனச் சொல்வர்; சொல்லி மிகக பொருளை ஈட்ட நினையும் நெஞ்சோடு நம்மேல் அவர் அருள் நீங்குவர்.

நந்தலைவர் சென்ற காட்டிற் புள்ளியும் வரியும் உடைய கலைமான் தலையிடத்துமுதல் முதல் கவர் விட்டு வளர்ந்தகொம்புபோலக கவர்விட்ட அடியினை யுடையது உழிஞ்சில் (வாகை) மரம். உழிஞ்சிலின் கிளை யிடத்து முற்றிய குலையான நெற்றுத் தூங்கும். திசைகளெல்லாம் பரந்து காற்றடிககும்போது அந் நெற்றுகள், ஆடும் கூத்தியரின் அரிக்கோற் பறை போல ஒலிக்கும். வாகையின் பக்கத்தே கற்குவிய லின் பககத்தினின்றும் தாவிச்சென்ற பொல்லாத நிழலையுடைய கள்ளியின் முள்ளுள்ள அடியில் இருந்து அவ்வழியே செல்வோர்க்கு வருவன அறிந்து கூறும் சிறிய நல்ல நாக்கினையுடைய பல்லி இருக்கும். இவ்வகையான காட்டில் நந்தலைவர் சென்றார்.

காட்டில் சென்றவர் நம்மேல் அருள் நீங்குவர் என வினைமுடிவு செய்க.—காவன் முல்லைப்பூதனார்.

## 152 குறிஞ்சி

**இது, இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

என் நெஞ்சு நடுங்குதற்குக் காரணமான அரிய துன்பம் நீங்குமாறு என்பால் வந்து முயங்கி

விட்டுக் குன்றிடத்துச் சிறிய ஊரின்கண் இவள் செல்கின்ருள். அவளுடைய சுருண்டு நெளிந்த கூந்தல் ஐம்பாலாக முடியப்பட்டிருக்கின்றது.

வெளியம் என்னும் ஊருக்குரிய தித்தன் நுண்ணிய தலைக்கோலுடைய பாடன் மகளிரைக் காத்த பெரிய புகழை யுடையன். அவனுடைய கடற்கரையில், சோலை அடர்ந்த பெரிய துறையுண்டு. அத்துறையிலே மரககலங்களைச் சிதையும்படி இருல் மீன்கள் தாக்கும். அவ்விடத்துள்ள மீன்களின் கூட்டம்போல அவள் கூந்தல் நெருங்கியிருக்கும்.

போரில் மொய்த்த பகையை வெல்பவன் பிண்டன் நன்னும் இவனை வென்ற வெற்றிவேலை யுடையன்; கல்ல கொடையுடையன்; களிற்றுப்பரிசில் ஈவதற்கு ஏதுவான மது உண்ணுதலையுடைய பாரம் என்னும் ஊர்க்குத் தலைவன்; முத்துமாலை அணிந்தவன். இவனது பாழி மலைச்சாரலில் களிக்கும் மயில்கள் கலாபம் விரித்தாடும். அம்மயிற் கலாபத்தை ஒத்தது அவள் கூந்தல்.

வலிய வில்லையுடைய வீரரின் தலைவன் நள்ளி. இவனது பக்கமலையிடத்துள்ள சோலைகளில கடவுட்குரிய பூவாகிய காந்தள் வண்டுகள் ஊத மலரும். அம்மலர்கள் மிகவும மணக்கும். இவள் தோள்கள் இம்மணம்போல் மணப்பன.

பாட வல்லாராயினும் பாட மாட்டாதவராயினும் பரிசில் பெறச் சென்ருேர்க்கு ஆய் சோற்றுப்

பருக்கையை நிறையக் கொடுப்பான். ஆழ்ந்த குழியிடத்தே யானைகளை வீழ்த்திப் பிடித்த ஆயின் தலையாறு என்னும் மலையிடத்தே மூங்கில்கள் செழித்து வளரும். அம்மூங்கிலின் கணுக்களின் இடையேயுள்ள தண்டு போன்றது அவள் தோள். அத் தோள்கள், நமக்குக கிடைக்சாதவாறு தூரத்தே சென்றனவாயினும் நமககு நடுங்கத்தக்க துயரைச் செய்யும். —பரணர்.

## 153 பாலை

### இது, மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது :

யான் வருந்துகின்றேன். எனது உள்ளமும் வருநதுகின்றது என் அன்புடைய மகள் இனிய வார்த்தையுடைய தோழிமாரோடு பந்துக்குப்பின் ஓடிவிளையாடுவாளாயினும் நொநது மிகவும் வருந்துவாள். அவள் இப்பொழுது இரங்கத்தக்கவளாயினள். கொடியவனாகிய அவன் அவளை மார்போடு அணைத்து இனிய சொற்களைக கூறிப் பிணிகக அவள் அவனை நமபினள். அதனால நாம் அடையும் துயரையும் நினையாளாயினள். விரைநது சுடுகின்ற வெயில் வேனிற்காலத்தே காட்டை அழிக்கும். அவ்விடத்து அடிககும் மிக்க காற்று ஒலிக்கின்ற மூங்கிற் கணுக்களைத் தீண்டும. அதனால், பொறிகளைச் சிந்துகின்ற பெரிய நெருப்பு மூண்டெரியும். அதனால் பசுமையற்று மலையின்பயன் நீங்கும். இவ்வகையான நீண்ட அரிய வழி செல்லுதற்கு ஏற்ற

தன்று. மெல்லிய தன்மைகளுடைய என்மகள இவ்வழியாற் செல்வளோ ?

கரிய உயர்ந்த மலைச்சாரலிடத்து உயர்ந்த சிகரத்து, தேன் பாய்ந்து வண்டு ஒலிக்கும விளங்கும் பூங்கொத்துடைய கோங்கு, நட்சத்திரம பொலிந்த வானைப்போல் தோன்றும். காற்றடிக்க உதிர்ந்து கமழ்கின்ற குளிர்ந்த மலர்கள் கையிடத்துள்ள விளக்குப்போலத் தோன்றும. இவ்வகையான மலையால் தடுக்கப்பட்டுள்ளது அச்சுரம்.

—சேரமான் இளங்குட்டுவன்.

## 154 முல்லை

**இது, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது :**

முல்லை நிலத்தே மிகுந்த மழை பெய்தது. வழிகளின் பக்கத்தே ஆழ்ந்த பள்ளங்கள் இருக்கின்றன. அங்காந்தவாயுடைய தேரை சிறு வாத்தியங்கள் போல அங்கு இருந்து சத்த மிடுகின்றன. குறிய புதரிடத்து நீண்ட காலுடைய அலரி நிறகின்றது. அதன் பக்கத்தேயுள்ள செம்பாட்டு நிலத்தில நுண்ணிய மணல் வரியாய் கிடக்கின்றது. சினமுடைய பாம்பின் கொடிய படம் விரித்தாற்போலக் குளிர்ந்த வாசமுள்ள காந்தள் முறுக அவிழுகின்றது. முறுகிய கொம்புடைய மான் தெளிந்த நீரைப் பருகி விருப்பமுடைய பெண்மானோடு தங்குகின்றது. இவ்வாறு காடு அழகுபெற்றிருக்கின்றது. பாகனே

இவ்வகையான குளிர்ந்த வழியால் விரைவாகச் செல்வதும் பிடரிமயிருடையதுமாகிய குதிரையின், மாலையிடத்துள்ள தூங்கும மணி ஒலிக்கும்படி தேரைச் செலுத்துவாயாக. நம்மை நினைந்துகொண்டு இருக்கும் இயல்புடைய காதலியை விரைந்து அடைவோம்.

—பொதும்பிற் புல்லாளங்கண்ணியார்.

## 155 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது:**

தோழி! எனது காதலர் "அழகிய ஆபரண மணிந்தவளே! என்று என்னை அழைத்தார்; பாவத்தின் வழிச்செல்லாத வாழ்க்கையும் பிறரிடத்துச் சென்று இரவாச் செல்வமும் ஆகிய இரண்டும் பொருளினால் ஆகும் எனக்கூறி ஐந்துவகையாக முடிந்த எனது கூந்தலைத் தடவினார். நாம் இவ்விடத்து இருந்து வருந்தினோமாயினும் அவர் தமது வினைமுடித்தற்குச் சென்றார். அவர் சென்ற வழியிடத்துள்ள பாணனது நாட்டில் பல விடங்களில் பயன் தரும் பசுநிரைகள் சேர்ந்து நிற்கும். நீண்ட சீழ்க்கை விடும் கோவலர் அவ்விடங்களில் கிணறு தோண்டியிருப்பர்; அவைகளில் வளைந்த வாயுடைய இறை கூடையால் இறைப்பர். தண்ணீர் வடிந்துசென்ற சிறுகுழி காய்ந்திருக்கும். தண்ணீர் விடாயுள்ள புலி அவ்விடத்தே தண்ணீர் பெறாது யானை உழக்கிய அடிகளில் கால் வைத்து நடந்து செல்லும். இவ்வகையான சேற்றுவழி

குற்றந்தீர்ந்த நாவுடைய கூத்தரின் மார்ச்சனை பூசிய மேளத்தின் கண்ணிடத்தே கைபடுதலா லுண்டான வடுக்கள் போலத் தோன்றும். இவ் வகையினதும் மலர் வாடுகின்றதுமாகிய மலையை அவர் கடந்து சென்றார்.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

## 156 மருதம்

**இது, தலைமகனை இடத்துய்த்துத் தோழி தலைமகனை வரைவு கடாயது:**

(வெற்றி வீரம் தியாகம்) என்னும் மூன்று முரசுகளையுடைய செல்வர் மூட்டுதலமைந்த கவரி யைக் குதிரையின் பிடரியிலே சூட்டுவர். செழித்த வயலிடத்தே விளைந்த சிவந்த வரியுடைய செந்நெல் லின் கதிரை ஈன்றணிமையுடைய பசு உண்ணும் அதனைக்கண்டு அஞ்சி வயல் காவலர் அதன் பசிக் குக் கரும்பை உண்பிப்பர். பின்னர் பாகலையும் நுண்ணிய கொடியுடைய பகன்றையும் அறுத்துக காஞ்சிமரத்துடன் அதனைக் கட்டிவைப்பர். இவ் வகையான இனிய புனலையுடைய ஊரனே! ஆய், கள்ளையும், காந்தட்கண்ணியையும் கையுறையாக வைத்தும் கொம்பும் நீண்ட செவியுமுடைய கிடாயை நீர்துறைக் கடவுட்கு அறுத்தும் இவளுக்கு நேர்ந்த நோய் தணியுமாறு அறியாளாய் அழும்படி இவள் மேனி பொன்னிறங்கொண்டது. அவ்வாறு கொண் டது, வயலிடத்துள்ள ஆம்பலின் புறவிதழ்தடிந்த பூ மார்பிடத்தே அசைய நீயும் தோழியும் பகற்

காலத்தில் விளையாடிப் பொலிவீராக என்று ஆய் கூறிவிட, அப்பொழுது மையுண்ட கண்ணையுடைய இவளும், ஆடுமிடத்து வந்து நின்னோடு மகிழ்ந்து தங்கி பிழையாகிய தவறினைற்போலும், பெரும்.

—ஆவூர் மூலங்கிழார்.

## 157 பாலை

**இது, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது:**

தோழீ! நமது காதலர் பிரிந்து செல்கின்ற வழியிடத்தே, கள்ளுவிற்கும் பெண்டிர் விற்கும், பிளந்த வாயுடைய குவிந்த பானை சுரந்ததும், பன்னுடையால் வடிக்கப்பட்டதுமாகிய கள்ளைச் சிவந்த கண்ணுடைய ஆறலைப் போர் குடித்துவிட்டுப் போரை விரும்பி ஆரவாரிப்பர். அவ்வீரர் எய்த அம்பினால் இறந்து பட்டோரை மூடிய கற்குவியல்கள் கிடக்கும். அக்குவியல்களுக்குப் பககத்தே கோங்க மரம் நிற்கும். அம்மரத்தின்மீது படர்ந்தேறிய அதிரற்கொடியில் இரவிலே அரும்பு மலர்ந்திருக்கும். காட்டியானை அக்கொடியை அரும்போடு பறித்து விடியற் காலையில் உண்ணும். இவ்வாறு அவ்வழி அச்ச முடையது.

அவ்வழியிடத்தே போர்முனையான மன்றிடத்துள்ளார் குடி எழும்பி வேறிடங்களுக்குச் செல்வார். அதனால் மன்றம் உலாவுவா ரின்றிப்புறக் கென்றிருக்கும். அம்மன்றத்தில் இருந்த பாவை

மழைப்பெயலுக்கு நெகிழ்ந்தும் வெய்யில் மிகுதலி ஞல் ஒளியிழந்தும ஒவிய வேலைப்பாடுகள் அழிந் தும் இருக்கும. அப்பாவைபோல மாலைக் காலத்தே உயிரோடு தனித்திருககவல்ல என்னிடத்து, தலைவர், என் நெஞ்சு விரும்பி உட்கொள்ளும்படி நம் பிரி வினைக் கூறுவாய். —வேம்பற்றூர்க குமரனர்.

## 158 குறிஞ்சி

**இது, தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழி செவிலித் தாய்க்குச் சொல்வாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.**

"இடி முழங்குகின்ற கூட்டமாகிய முகில்கள் மழைபெய்து ஓய்ந்தன. இருள் செறிந்த யாமமா யிருந்தது. மின்னல் நிமிர்ந்தாற் போன்று கனத்த குழை விட்டுவிளங்கப் பின்னிவிட்ட கூந்தலையுடை யவள், மலையினின்றும் இறங்கு மயிலைப்போல ஒதுங்கி ஒதுங்கிப் பரணில் ஏறி இறங்கி வரக்கண் டேன்" என்று சொல்லி இவளை வருத்தா திருப்பா யாக. அன்னையே கேட்பாயாக. தெய்வமுறை கின்ற எமது மலைச்சாரலிலுள்ள சோலையிடத்து ஒளிவிடும் பூவினைச் சூடித் தாம் வேண்டிய வடி வினைக்கொள்ளும் தெய்வப்பெண்கள் வருவார்கள். வந்து அவர்கள் உறங்குவோருக்குக் கனவிடத்தே மெய்போலத் தோன்றி மருள் செய்தலும் உண்டு. அதனல் இவள் தானும் அழகு குறைந்தாள். யானும் வருந்துவேன். மன்றிடத்துள்ள மரத்தி லிருந்து அச்சந்தரும்படி கூகை குழறினும் அவள்

வீட்டினுள்ளே செல்வாள். புலிக்கூட்டம் போன்ற நாயின் தொடரை வேட்டையாடு மிடத்துவிட்டு முருகன்போலும் கோபமும் சீற்றமும் வலியும் உடைய என தந்தை வீட்டிடத்தில் இருந்தானாகை, இவ்வாறு செல்லுதலை அவள் அஞ்சுவாள். (தந்தை வீட்டில் இருக்கும்போது தலைவி குறியிடத்துச் செல்தலை அஞ்சுவாள் என்றவாறு.)

—கபிலர்.

## 159 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது :**

"நம் காதலர் சென்ற அரிய வழியிடத்தே கூரிய அம்பும் வளைந்த வில்லுமுடைய வீரர் பகைவர்களுக்கு வருத்தத்தைச் செய்யும் வலிய சிலையினை வளைப்பர ; தமது பலவாகிய ஆனிரைகளைக் கவர்ந்துவந்த வெட்சிவீரர் போர்முனையை கல்லென்னு மோசையுடன் தாக்கிக் கெடுப்பர். அதனால் அவர்கள் மிகுந்த மனச்செருக்கும் வெற்றியுமுடையரா யிருப்பர். அவர்கள தழைககண்ணி அணிந்தவர்களாய் மிகக ஒலியுடைய துடியின் தாளத்துக்கு ஆடுவர். ஆடி, கழியிலே விளைந்த கல்லுப்பின் விலையைக் கூறி, உமணர், தமது வளைந்த நுகத்தினையுடைய உப்பு வண்டியிற் பூட்டிய மாடுகள் பலவற்றையும் பரந்து மேயும்படி அவிழ்த்துவிட்டு இளைப்பாறிப் பின்னர் சோறாக்கி உண்டுவிட்டுச் சென்ற கல்லிடிந்த அடுப்பிலே

இறைச்சியைச் சுட்டு உண்பர். இவ்வகையான கவர் பட்ட வழியைக் காதலர் கடந்தார்," எனச் சொல்லி வருந்தாதே தோழி !

ஆமூர், நல்ல இடியேறு ஒலிக்கின்ற விசும் பிடத்து உயர்ந்த சிகரத்தை உடைய குறிய மலைக்குக் கிழக்கே, செறிந்த ஏப்புழை களையு டைய நெடிய மதிலையும், உயர்ந்து விளங்குஞ் சிறப்பினையு முடையது. கொடுமுடி என்பான், வில்லும் விசாலித்த கையும் உடைய வானவனது வண்டு ஒலிக்கும் மதமுடைய சிறுகண் யானையின் கிமபுரி இறுக்கிய விசாலித்த மருப்பு ஒடிய வெட்டி அதனைக் காவல் செய்வான். இவ்வகையான ஆமூரை நின் காதலர் அடைந்தாலும் அவர் உனது ஆபரண மணிந்த ஆகத்தை மறந்து நீண்டு தரிக்க மாட்டார் —ஆமூர் கவுதமன் சாதேவனார்.

## 160 நெய்தல்

இது, தோழி வரைவு மலிந்து சொல்லியது :

நிறைந்த கருப்பமடைந்த ஆமை அடும்பங் கொடியினினின்றும் பிடுங்கிய தண்டின் குவியலை வெள்ளை மணலிடத்தே சேர்த்துவைக்கும். அது அதன் மறைவிலே புலால் நாறும் வளைந்த வட்டுக் காய் வடிவுடைய முட்டையை ஈன்று அவை பொரிக்குமட்டும்புதைத்துவைக்கும்; குஞ்சுகள் பெரி தாம் அளவும் ஆண் ஆமை பாதுகாத்துவரும். இவ்வகையான கடற்கரைச் சோலையையுடையவ

னது தேரிடத்துப் பூட்டிய குதிரைகள் அம்பு போலப் பாயுந் தன்மையுடையன; தாற்றுக் கோலாற் குத்தப்பெற்ற அவை விரைந்து ஓடுதலை அஞ்சிக் கடிவாள வாரினால் ஓட்டப்பெற்று, இளையரையின்றிச் சீறார் காணமல், மறைந்து குதிதிரை, இதுவரையும் இரவில் மெல்ல வந்துகொண்டிருந்தது. இப்பொழுதோ அவருடைய தேர் ஒல் எனச் சத்தமிடும் இளையரோடு கூடி, வலிய வாயையும் அம்பல் ஓசையையுமுடைய ஊர்ப்பெண்டிர் காணப், பாயும் குதிரைகளால் வேகமாய் இழுக்கப்பெற்றுப் பகற் பொழுதில வந்தது. தேர் குளிர்ந்த கழியைக் கடத்தலினால் சில்லின் நுனிபட்டு முகம் பிளந்த நெய்தல் மொட்டுகள் பாம்பின் உயர்த்திய தலைகள்போல வாடுவனவாய் அலைமீது எழாநின்றன.

எனது நிறையழிந்த நெஞ்சம் நடுங்கிற்று. அது இரங்கத்தக்கது. தோழீ! நினக்கும் அவ்வாறோ? —குமிழிஞாழலார் நப்பசலையார்.

**161** பாலை

**இது, பிரிவுரைத்த தோழி தலைமகளது வேறுபாடு கண்டு முன்னமே உணர்ந்தாள் நம்பெருமாட்டியென்று தலைமகனைச் செலவு விலக்கியது:**

ஐயனே! நீர் செல்ல நினைந்த வழியிடத்தே வளைந்து சுருண்டு ஒழுங்குபடாத மயிருடைய வலிய கண்ணுடைய ஆறலைப்போர் தட்டிக் கூராக்கிய அம்பை மிகவும் விட்டு வழிப்போக்கரைக் கொல்வர்.

இவ்வகையான கவர்பட்ட வழியிடத்தே கிடக்கும் நாறிய ஊனை விரும்பும் வாழ்க்கையும் சிவந்த செவியுமுடைய எருவைச் சேவல் அவ்விடத்திருந்து தனது கூட்டத்தை அழைக்கும். இவ்வகையான காட்டைக கடந்து பொருள் செய்தற்கு எண்ணினீ ரென்பதை அவள் சிறப்பாகக கேள்விப்பட்டாள்; கேள்விப்பட்டு, தோளிடத்தே தாழ்ந்து வண் டுண்ண ஒலி உண்டாகும் கரிய நெருங்கிய கூந்த லும் அழகிய மாந்தளிர் போன்ற மேனியும் ஆராய்ந்த ஆபரணமு முடைய சிறியவளின் கண் கள், அழகு தேமல் சூழ்ந்த மார்பிடத்தே அழகு போன்று தோன்றிய நல்ல இளமுலைகள் நனையும் படி நீர்விட்டன. வினைவயிற் பிரிவதெப்படி.

—மதுரைப்புல்லங் கண்ணனார்.

## 162 குறிஞ்சி

**இது, இரவுக்குறிக்கட் டலை மகளைக் காணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:**

அள்ளக குறைவுபடாததும், சங்கு வளர்வதும், அளத்தற்கரியதும், செறிந்து இருண்டு தோன்று வதுமாகிய கடலைப் பார்த்தாற் போன்ற ஆகா யத்தில் அழற்கொடி போன்ற மின்னல் வளைந்து அசைந்தது. கருமையாக இடி இடித்துத் துளிகளைச் சிதறி வானம் மழை பெய்தது. மறைந்து நிற்கும் இடத்தை அறியாத நடுயாமத்தே அரிய காவலைச் செய்யும் நகர் காவலர் சோர்ந்திருக்கும் தருணத்

தைப் பார்த்து பனியோடு சேர்ந்து வீசும் குளிர் காற்று வீச, அவள் தந்தையின் மாளிகையின் ஒரு புறத்தே நின்றேன். அப்பொழுது, ஆற்றின் கருமணல் போன்று பிரகாசிக்கும் கூந்தலும், மலர்போன்று ஒளியுடைய முகத்தே சுழலுகின்ற பூவிதழ் போன்ற குளிர்ந்த கண்ணும், பூவரும்பு போன்ற அழகிய வெண்பல்லும், நகைமாட்சிமைப் பட்ட, இலங்கும் நல்ல சிவந்த வாயும் உடையவள், அழகிய வளை விளங்கும்படி கைவீசி நடந்து வந்தாள். வந்து காற்றுப்பட்ட தளிர்போல நடுங்கி நோய் தீரும்படி முயங்கினள்.

வீரக்கழ லணிந்த அதியமான், நல்ல புகழைப் பாடும் பாணர் விரும்பியவற்றைக் கொடுத்தலிற் றப்பான். அவனது மலையிடத்தே பிடுங்குவதை அறியாத நல்ல பழங்களுடைய பலாமரங்களோடு வேங்கைமரங்களும் வளர்ந்திருக்கும். அம்மலையிடம் பொலியும்படி, பாண்டியனது யானை அணியில் அசையும் வெற்றிக்கொடிபோல அருவிநீர் ஓடும். அவ் வருவியிடத்து விளையாடும் தெய்வப்பெண்கள் போல இவள் கிடைத்தற் கரியள். —பரணர்.

## 163 பாலை

**இது. பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றுமை மீதூரச் சொல்லியது.**

வானம் அதிரும்படி திரண்ட முகில்கள் பரந்த மலர்கள் குழையும்படி மழையைப் பொழிந் தோய்ந்தது. இவ்வகையான நாளின் கடையாமத்தே யான்

தமியளாக உள்ளத்தே வருத்தம் மிக, பிரிந்தவரை நினைந்து, சிலவாகிய கைவளைகள் சோர அவர் குறித்த காலத்தை விரும்பி எதிர்பார்த்து இரங்கத் தக்கவளா யிருக்கின்றேன். இவ்வாறு யான் இருக்கின்றேனென்பதை நினையாது, களிறு மூச்சு விட்டாற் போன்ற துவலையுடைய தாமரை கரியும்படி வீசும் முன் பனியுடைய பாதி இரவில், குன்று நெகிழ்ப்பது போன்ற குளிருடைய வாடையே! என்னிடத்து வீசினாய். புனல்பட்ட நுண்மணல் போல நெஞ்சு நெகிழ்ந்து அவிழும்படி, கொடியோர் சென்ற தேயத்து மடியாது இத்தன்மையாகச் சென்று வீசு. வினையை விரும்பிச் சென்றார். எனது நிலைமையை நினைப்பது முண்டோ?

—கழார்க்கீரனெயிற்றியார்.

## 164 முல்லை

இது, பாசறைக்கண் இருந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:

ஞாயிறு கதிராகிய கைகளினால் பசுமையை வாங்குதலின் நிலம்பயன் ஒழிந்தது. இவ்வாறு பயனொழிந்த காடு அழகு பெறும்படி மிகுந்த மழை பெய்தது. பொறியும் வரியும் உடைய வண்டு ஒலிக்கும்படி நறிய பூவுடைய முல்லையோடு தோன்றி காடு அழகுபெறும். இவ்வாறு பூக்களையுடைய காடு நறுமணங்கமழும். பகைவரின் மதிலின்மீது பாய்தலின் கிம்புரியை முறித்த கொம்புடையதும், கட்டுத்தறியை முரிப்பதுமாகிய யானையையுடையவனு

மாகிய வேந்தனது வினை ஒழியின், நங்காதலரின் நிலைமை என்ன? என மயங்கிக் கலங்கும் கண்ணோடு வருந்தி உறையும் அவளது பழைய நலத்தைப் பெறுவதற்கு இது நல்ல காலமாகும்.

—மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன்றேவனார்.

**165** பாலை

**இது, மகட் போக்கியதாயது நிலைமையைக் கண்டார் சொல்லியது:**

பெரிய தலையுடைய இளம் பெண்யானை குழியிடத்து வீழ்ந்து களிறறை அழைத்துச் சத்தமிடலும் அதற்குப் பயந்த சிவந்த வாயுடைய யானைக கன்று, பூநதாதாகிய எருககிடககும வீதியுடைய மூதூரிடதசே ஓடிசசெனறு எருமைப்பசுவின் முலையிடததுப் பால குடிககும. இவ்வகையான பல நாடுகளைக் கடநதுசென்ற நல்லவள்பொருட்டு வருந்திய ஆயமும் அழகிழந்தது. அவள், கண்ணையும் நெற்றியையும் தடவி, குளிர்ந்து அசைகின்ற நொச்சி நிழலில் சென்று தாழியிடத்துண்டான குவளையின் வாடிய மலரைச் சூட்டி பரப்பிய மணலிடத்தே கிடத்திய பாவையை எடுத்து அணைத்துக்கொண்டு இன்றோடு என்னுயிர் தரிக்கமாட்டாது போகின்றதென்று தாயும் அழும்.

**166** மருதம்

**இது பரத்தையோடு புனலாடிய தலைமகன் தலைமகள் மனைப்புக்கு, யானாடிற்றிலனென்று சூளுற்றானென்று கேட்ட பரத்தை தன் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.**

நல்ல மரங்களினிடையே சாடிகளில் முற்றும் படி வைக்கப்பட்ட கள், பலநாளா யள்ளும் பாத் திரத்திலிருந்து ஒழுகுவதுபோல வீதியிலே மழை தூறும், பழைய பல நெல்லுடைய வேளூரிடத்து நறிய வாசம தெளித்தாற் போன்று நாறும் பூங் கொத்தாற் கட்டப்பட்டுத் தெய்வத்துககுச சூட்டப் பட்ட மாலையை, பொறியும வரியும் உடைய வண்டு ஊதாது நீங்கும். இவ்வாறு உயர்ந்த பலியைப் பெறும் அச்சந்தரும தெய்வத்தின் கூந்தலைப் போன்ற மயிருடையவளாகிய பரதையோடு நீரா டினேனாயின் வருந்துகவென்று மனையாளைத் தேற் றுங் கணவனாயினர். தோழி! இவ்வாறு கூறிய வர் தார்பூண்ட களிறறைப்போல நேற்று என் னைத் தழுவி வதுவை அலங்காரம் பொருந்திய என் னோடு புதிதாக வந்த கரை புரண்டோடும் காவிரி நீரில் ஆடிய அவரானவர். என் செய்வது.

—இடையன்நெடுங்கீரனார்.

## 167 பாலை

**இது, தலைவன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லி அழுங்கியது :**

ஒளிவிடுகின்ற நீலமணியோடு மாறுபட்ட, பல வனப்புடைய பசிய வடமணிந்த அல்குலுடைய மாயோளொடு தொழில் மாட்சிமைப்பட்டதும், அழகு செய்யப்பட்டதும் பூககள் பரப்பியதுமாகிய படுக்கையிடத்தே விண்ணைமுட்டும் நீண்ட மாளிகை யிடத்திற் றங்கி இற்றைப்பொழுது இனிது கழிந்

தது. நாளை உறங்காத கண்ணுடையேமாகத் தனிமைமவந்து துன்புறத்தும்படி செல்வேம். நெஞ்சே! வழியிற்செல்லும் சாத்தரைக் கொன்று வழியிற் கூடியிருந் றுண்ணும் அச்சந்தரும் அம்புடைய கொடிய வில்வீரராகிய ஆறலைகள் வரின் பெரிய பகையை அஞ்சிச் சனங்கள் குடிபோன ஊரிடத்து உலறிய பீர்க்கு நிற்கும். இவ்வகையான மூதிய பாழ்நிலத்தே முருங்கையை மேய்ந்த பெரிய கையுடைய யானை சொறிகின்ற முதுகை உரைஞ்ச ஒதுங்குதலால் செங்கல்லாற் கட்டிய சுவரின் விட்டம் முறிந்துவிழும். விட்டம் விழுதலால் மணிப்புறு இருத்தல் ஒழிந்த மரம்பொருந்திய மாடத்தே வைக்கப்பட்ட கடவுள் விழுந்துபோயிருக்கும். அதனால் புல் என்று சொரியும் பலியை மறந்த மெழுகாத புலவிய நிலத்தே பறைக்கண் முதலியன சிந்திக் கிடக்கும். சிறிய வீட்டின் தூண்கள் சிதையும்படி துளைத்து மண்டியிருக்கும் கூரிய வாயும் மூகருமுடைய கறையான் இறப்பைத் தின்ற இவ்விடத்தே நாம் தங்குவேம்.

—கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

## 168 குறிஞ்சி

இது, இரவுக் குறிவந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.

வானை மூட்டும் மலையை உடையவனே! யாமத்தே உமது வரவைநோக்கி நோய் மிகுந்தேமாகவும், கண்ணீர் வாரும் கண்ணுடையேமாகவும்

உறைகின்றேம். குழூஉரிடத்தே உள்ள ஆன் குன்றிடத்துப் பெரிய நிழலிலே பெரிய பசுக்கூட்டங்கள் சேர்ந்து நிற்கும். இவ்வகையான குழூஉர் கொடையாற் சிறந்த உதியனது. அவனது சமையற் சாலைபோல் அருவி ஒலிக்கும் பெரிய மலையிடத்து ஈன்றணிய பெரிய பெண் யானையைத் தழுவிய களிறு தன் அசைகின்ற நடையுடைய கன்றை நித்திரையிற் காவல் செய்யும்.

அப்பொழுது கடிய கண்ணும் விளங்கும் வரியுமுடைய வலிய புலி ஒடுங்கிய அளையினின்றும் வெளியே வந்து குன்றிடத்தில் முழங்கக் கானவர் உறங்குவர். இவ்வகையான இராக்காலத்தே மான் செல்லும் ஒடுங்கிய வழியால் வருதலை. நீர் இனி இராக்காலத்தே ஒழித்தல வேண்டும்.

—கோட்டம்பலத்துத்துஞ்சிய சேரமான்.

**169** பாலை

இது, தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது :

நடுககாட்டிலே, மரங்கரிந்து நிலம் பசுமை நீங்குமபடி அசைகின்ற சூரியனது கதிர், பரந்த நெருப்புப்போல விளங்கும். அவ்விடததே புலி கொன்று உண்ட பெரியகளிற்றின் மீந்த ஊனை ஆரவாரமிகுநத மறவர் வயிரிய தடியிடத்தே கோத்துப் புழுககி உண்டு செல்வர். கடல் நீரில் விளையும் உப்பாகிய அமிழதை விற்கும் உமணககூட்டம

அவர்களை எறிந்துவிட்டுச் சென்று வயிரத்தடிகளைக் கடைந்து மூட்டிய நெருப்பால், சுனையினின்றும் மொண்டு வார்த்துவைத்த உலையை மூட்டுவர்.

இவ்வாறு நாம பல அரிய வழியைக் கடக்கின்றேம். எனது காதலியோ, நம்மை நினைந்து பசலை பாய்ந்த மேனியளாய் நெடிது நினைந்து, சூரியன் சாய்ந்த தனிமைகொண்ட மாலைக் காலத்தே, மெல்லிய விரலை நெற்றியிடத்தே சேர்த்தியவளாய், கயல்மீன் போன்ற கணகளிடத்துக் கண்ணீர் வரப்பெறறுப், பெரிய தோள்கள் நெகிழ்ந்த வருத்தத்தோடு வருந்தியிருப்பாள். திருந்திய ஆபரண மணிந்த அவள் இரங்கத்தக்கவளாவள்.

—தொண்டியாமூர்ச் சாத்தனார்.

## 170 நெய்தல்

**இது, தலைமகன் காமமிக்க கழிபடர் கிளவியாற் சொற்றது.**

எனது காதலைத் தலைவருக்குக் கடற்கரைச் சோலையுங் கூறாது; தேன் சொட்டும் நறிய மலருடைய புன்னையும் சொல்லாது; கடற்கரைக் கழியும் மொழியாது. ஒப்பற்ற நின்னையல்லால் வேறு யாரும் இல்லேன். பாணனே! கழியிடத்து மலர்ந்த கண்போன்ற நெய்தலின் கமழ்கின்ற இதழின் நாறறத்தை அமிழ்தென விரும்பிக் களித்து வண்டு பறந்து வரும் துறைவனிடத்தில் நீயே சென்று சொல்லுதல் வேண்டும். தாழையின் பெரிய கொம்பரிடத்து பலமுறை வருத்தமோடு

அசைந்திருக்கும் சிறிய கடற்காக்கை விரும்பத்தக்க பெடையோடு, சுறுமீன் திரிவதும், மீன் பிடிக்கப் படுவதுமாகிய கடற்பரப்பில், வெள்ளிறால் அயில கொள்ளும் நள்ளென்னும் யாமத்து, உனது துனை பத்தைக் களைந்தவள் தனது துன்பத்தை நீந்து வளோ? என்று கூறு.

—மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார்.

## 171 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது :**

நெற்றியும் நுண்ணிய பசப்புக்காட்டும், அகன்ற மலையிலுள்ள காட்டில் தெரிந்தறுத்த மூங்கிலின அழகையுடைய தோளும் வாடும். நாளும் கடவுளை நினைக்கின்ற வலிய பெரிய தவமுடையவர்களைப் போல ஓவாது நினையாதே. தோழி வாழ்வாயாக. இலங்குகின்ற திரண்ட அழகிய வளை நெகிழ நினது காதலர் சென்றார். அவர் சென்ற சுரவழியிடத்தே வாடிய தலையுடைய ஞெமை மரம் நிற்கும். அவர் பெரிய மலையுடைய சீறூரிடத்தே தங்கியிருப்பார். அவ்விடத்தே ஆண் புலியின் குரலைக் கேட்டு அஞ்சியவர்கள் நல்ல அம்பைத் தெரிந்துகொண்டு வில்லைத் தோளிடத்தே வைத்து இடந்தோறும் செல்வர். அதனால் கரிய கொம்புடைய இருப்பையில ஊறும் பெரிய கையுடைய கரடி கீழ் உள்ள பூக்களை உண்ணாது மேற்கொம்பர்களிலுள்ள, பழம்போல்

முதிர்ந்த இனிய பூக்களை உண்ணும். இவ்வகையான சுரத்தைக் கடந்தவர் வந்து சேர்வார்.

—கல்லாடனார்.

## 172 குறிஞ்சி

**இது, தோழி தலைமகனை இடத்துய்த்துவந்தீ தலைமகனை வரைவு கடாயது :**

யானை முழங்குவதும், நீர் விளங்குவதுமாகிய பிரகாசிக்கின்ற மலையிடத்து வண்டுகளோடு விரைந்து செல்கின்ற வெள்ளிய அருவி, இனிய ஓசையுடைய வாத்திய ஒலிமையான இம்மெனும் ஒலியோடு கல்முகையுடைய வெடிப்புகள் ஒலிக்கும் படி விழும். இவ்வகையான மலைச்சாரலிடத்து மூங்கில் வளர்ந்திருக்கும். அவ்விடத்து இரும்பினாற் பண்ணியன போன்ற கரிய கைகளுடைய கானவன் விரிந்த மலருடைய ஆச்சாமரத்தின் பக்கத்தே மறைந்திருந்து அம்பைத் தெரிந்து புள்ளி நெற்றியுடைய யானையின் நெஞ்சிடத்தே செலுத்தி அதனைத் தன் வலியாற் கொல்வான். அவன் அதன் வெள்ளிய கொம்பை எடுத்துப் புல்லால் வேய்ந்த தனது குடிலிடத்தே காயும்படி ஊன்றி வைப்பான்; முற்றததிலே மேளங்களை ஒத்த கனிகள் தொங்கும் பலாவின்கீழ் இருந்து கள்ளை அருந்த விரும்பிச் சுற்றத்தோடு அதன கிழிருந்து ஆரவாரத்தோடு அதனை உண்பான்; உண்டு சந்தனக்கட்டை விறகிற் சுட்ட ஊன்புழுக்கை அயருவான். இவ்வகையான மலைநாட்டவனே! நீ தலைவிமாட்டு அன்

பில்லை யாதலை யான் அறியேன். அறிந்தனையின் இன்று, அழகிய ஆபரணமும் பூவிதழ் போன்ற கண்ணும் உடைய தலைவியின் மணிபோன்று மாட்சிமைப்பட்ட அழகு சிதையும்படி பொன்னை ஒத்த பசலை பரவாது. அது கழிந்தது.

—மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்.

## 173 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது :**

தருமத்தை விடா தொழுகுதலும், சிறந்த உறவினரது பல துன்பங்களைத் தீர்த்தலும் வருந்தாத உள்ளத்தோடு ஓரிடத்தில் இருந்தவர்களுக்கு இல்லை எனக் கூறித் தலைவர் பொருள் செய்யும் வினைக்குச் செல்லும் நெஞ்சுடையர் ஆயினர். நறிய நுதலும் கரியநீண்ட கூந்தலும் உடைய நீ பிரிந்திருத்தலாலாகும் அரிய துன்பத்தைச் சிலநாட்கள் தாங்கி யிருத்தல் வேண்டுமென்று, அவர் நின் நல்ல அழகிய பிரகாசிக்கின்ற வளையைத் திருத்தினர். பல புரிகளுடைய நீண்ட கயிறுடைய வண்டியில், வலிய கழுத்தைப் பூட்டிய எருது, துறையிடத்துள்ள ஏற்றத்தே ஏறிச் செல்லும்படி உமணர் ஆரவாரஞ் செய்வர். அதற்கு அஞ்சிய மான்கூட்டம் பெண் மானோடு வெருண்டு ஓடும். காடு அழகு அழியும்படி கோடைக் காற்றுக்கு உரைஞ்சிய பெரிய மூங்கிற் கண்ணிடத்து நின்று தெறிக்கும் கழுவாத முத்து கழங்குபோல் தோன்றும். குழியிடத்துப்

புதைத்துவைத்த பழைய வலிய இனிப்புடைய கள்ளும் அழகிய தேருமுடைய நன்னது விண்ணை முட்டும் நீண்டவரை இவ்வகையினது. பொன் விளைகின்ற அச்சாரலின் பக்கத்தால் மலையைக் கடந்து சென்ற தலைவர் வருவார், தோழி! வாழ்வாயாக. —முள்ளிபூர்ப்பூதியார்.

## 174 முல்லை

இது, பாசறைக்கட்டலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது :

இரண்டு பெரிய அரசர் மாறுபட்ட பெரிய போர்க்களத்து ஒரு படையைக்கொண்டு சென்று, வந்த படையை ஓட்டும், செல்வர்க்கு வெற்றி தாமதிக்கத் தக்கதன்று. பூமி துன்பம் நீங்க வெற்றிமுரசு கொட்டி யாம செல்வேம் என்பதைக் காதலி அறியாள். முல்லையாகிய நல்ல காட்டில முதிய முல்லைக்கொடிகள் தழைக்கும்படி மழை சொரிந்து காலையில் வானத்து முழங்கும். முகில் முழங்குந்தோறும வருநதி ஒடுங்கி நம்மைப் புலநது வருத்தங்கொண்ட பசலைமேனியளாய் யிருப்பாள. வேங்கையின் மலர்ந்த நறிய பூவைப்போல அழகு பெற்ற ஆகத்தே அரும்பிய மாசற்ற சுணங்கை யுடையவளாய் நல்ல மணல் பரப்பிய முற்றத்தே உலாவுவாள். இவ்வகையான நல்ல மெல்லிய நடையுடைய காதலி என்ன ஆகுவளோ?

—மதுரை அளககர்ஞாழார் மகனர் மள்ளனர்.

## 175 பாலை

இது, பிரிவின்கண் வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது :

*விம்மிய விளிம்பு உரிந்ததும், விசையுடையது மாகிய வலிய வில்லை ஆறலை கள்வர் கையிடத்தே வைத்திருப்பர். அச்சிலையிடத்துவைத்து எய்யும் ஓசையுடன் செல்லும் கொடுமையாகிய கூரை யுடைய அம்பு வழிச்செல்லும் புதிய மாக்களின் உயிரைப் போக்கும். விட்டுப்போகாத பருந்தின் கூட்டம் தம் மினத்தை அழைத்து நாறிய ஊனைப் பிடுங்கி உண்ணும். காதலர் நாம் நம்புதற்கரிய சபதங் கூறியும், பல மாட்சிமைப்பட்ட வளைகள் அணிந்த முன்கையைப் பிடித்தும் வினைமுடித்து வருவேன் என்றார், தோழி! காற்றைப்போல் வேகமாகச்செல்லும் தேரும், கொடையும உடைய பாண்டியன் ஆலங்கானத்தே போர் வென்று உயர்த்திய வேலிலும பார்ககப், பலமுறை அதிகம் மின்னி, ஆகாயத்திலே கடிய இடி யிடித்துக், கிரணங்கள் நிரைத்த சக்கரமுடைய திருமாலின் போர் வென்ற மார்பிடத்தே பொருந்திய மாலை போலச், செல்வமுடைய தேயத்தே, நிறமுடைய மண் பல பயன்களைப் பூத்து மலரும்படி குளிர்ந்த மழை பெய்ய, முகில்கள் தாழ்ந்து இருளும்போது வருவேன் என்றார். பெயராத பருந்தின் சுற்றம் தம் மினத்தை அழைத்து நாறிய ஊனை உண்ணும் சுரத்தைக் கடந்தார்.*

[செழியன் காற்றைப்போற் செல்லும் நீண்ட தேரும், கொடையும் உடையன். அவன் ஆலங் கானத்தே போரை வென்று வேலை உயர்த்தினன். மேகம் அவ்வேலினும் பார்க்க பலமுறை மின்னி முரசுபோல் இடி இடிக்கும். நேராகிய கதிர்கள் நிரைத்த சக்கரப்படையுடைய திருமாலின் போர் ஓய்ந்த மார்பில அணியப்பட்ட மாலைபோல அழகுடைய தேயத்தில பலநிறப் பூக்களை நிலம் செழிப்படைந்து பூக்கும்படி குளிர்நத மழையைப் பெய்ய மேகம் தாழ்ந்தது. பருந்து தம மினத்தை அழைக்கின்ற சுரத்தைக் கடந்தவர் நமபுதறகரிய வஞ்சினத்தைச சொல்லியும், பல மாட்சிமைப்பட்ட அழகிய வளையல்களுடைய முன்கையைப் பிடித்தும் இக்கார்காலத்தே வினைமுடித்து விரைவில் வருவே னென்றனரல்லரோ? தோழி! என்று கூட்டுக]

—ஆலம்பேரி சாத்தனர்.

## 176 மருதம்

### இது, தோழி தலைமகனை வாயின் மறுத்தது

கடலைப் பார்த்ததுபோலப், புட்கள ஒலிக்கும், வயல் இடம் அகன்றிருக்கும், அங்கு கழுவை நாட்டி வைத்தது போன்ற மொட்டுகள் இலங்கத் தாமரை பூத்திருக்கும். தாமரை நிலம் வெடிக்கும்படி வேர் முதிர்ந்த கிழங்கை வீழ்த்தியிருக்கும். அதன் துவார முடைய திரண்ட கால் கரும்புபோலப் பெரிதா யிருக்கும்; இலை, யானையின் செவிபோன்றிருக்

கும். இவ்வகையான வயலிடத்து வேப்பம்பூ மொட்டுப் போன்ற நீண்ட கண்ணுடைய நண்டு இரை தேடும். வெள்ளைக் கொக்குககு அஞ்சி அயலே செழித்து வளர்ந்திருக்கும் பகன்றையின் பக்கத்தே உள்ள சேற்றில் வரி உண்டாக ஓடி விரைவாகத் தனது நீர் நிறைந்த மண் புற்றில் ஒளிக்கும். இவ்வகையான மருத நிலத்தை யுடையவனே! மலையிடத்தே வளர்ந்து மரத்திற் படர்கின்ற வயலைக் கொடியின் வரியுடைய மலரை, ஆம்பலோடு சேர்த்துத் தழையுடை யணிந்து விழாக கொண்டாடும் மகளிரோடு (பரத்தையரோடு) தழுவி விளையாடிய உன்னை, மலர்போன்ற கண்ணும் அழகிய ஆபரணமுமுடைய அவள, குறிய வளைகளாற் றழுவிய உனது நீண்ட தொடர்பை விட்டு வருந்தினாள் போலும்! "எம்மைப்போல சிறிய மயிர்க்குடுமி யுடைய புதல்வரைப் பெற்று நெல்லுடைய பெரிய வீட்டில் நின்னையின்றி உறைய என்னவிதி யுடையராயினேம்" என்று கூறி, முகத்தின் அழகு சிதைய ஏங்கி அழுதாள். இவள், அடித்தது போன்று இடையிடையே எழுந்த பொறியும், பல முறை நொடித்ததனால் உண்டானது போன்ற சிவப்பும் உடைய மெல்லிய விரலை வைத்துத் திருகுதலினால், கூரிய நுனை மழுங்கிய பல்லினளாயினாள். உன்னைப் பரத்தையரிடத்திற் கண்டதை ஊர் முழுவதும் சொல்லும். நீ அவர்களிடத்திற் செல்வாயாக.

—மருதம் பாடிய இளங்கடுங்கோ.

## 177 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தியது :**

"யான் எனது பழைய அழகு கெடும்படி சோர்ந்து ஒடுங்கவும், அவர் இன்னும் வாராராயினர். இனி யாது செய்வேன்" எனப் பெரிதும் புலம்புவதை நிறுத்துவாயாக. அவர் சென்ற சுரவழியிடத்தே, மூங்கில் நெருங்கி வளர்ந்திருக்கும் மலையில் சுரபுன்னையின் தலை வாடும்படி வெயில் கோபங் கொண்டு எறிக்கும். அவ்வழியிடத்துப் பழுத்த சிவந்த கனியை விரும்பி உண்ணும், காட்டுமயில், சூல் முதிர்ந்த பெரியபேட்டை, மணல் எழும் ஆற்றின் கரையிடத்திருந்து, கொம்பு வாத்தியம்போலக் கூவி அழைக்கும். இவ்வாறு காட்டைக் கடந்து சென்றார் உன் கணவர். வெற்றிவேலை இரத்தம் பிரளும்படி எறிந்து பகைவரின் மலையை ஒத்த யானையைக் கொன்று நெருங்கிய போரை வென்ற வீரக் கழலணிந்த பண்ணனது, காவிரியாற்றின் வடகரை. அவனது, வடக்கே நிழலுடைய நீர்நிலைக்குப் பக்கத்தில் நிற்கும் நீண்ட அடியுடைய மாவின் தளிரை ஒத்த மார்பிடத்தே அழகுபெறத் தோன்றின அழகு தேமல் படர்ந்தன, அழிய நின் தனங்கள். அவையிடத்துப் பரந்த நின் அழகு தேமல் மீது எழுதப்பட்டுள்ளன, தொய்யிலாகிய கரும்பும் வல்லியும். நின் தலைவர் பிரிந்து நீடித்தனராயினும், இத் தொய்நிலை நினைந்தும், சிறிய கண்ணுடைய

பெண் யானையின் துதிக்கைபோல நெய்பூசி ஐம்பாலாயப் பின்னி முடிந்த வாசமிகுந்த கூந்தலை நினைந்தும் விரைவில் வருவார்.

—செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார்.

## 178 குறுஞ்சி

**இது, தோழி வரைவு மலிந்து சொல்லியது.**

வயிரத்தைப் போன்றதும கூரியதுமாகிய ஏந்திய மருப்புடையது பன்றி. அதன் மயிர், மூங்கில் வேர் போன்றது. அது, பறைகண் போன்ற வட்டமான சுனையிடத்து நீரைப் பருகும். குவளையின் இலை போன்ற இலையுடைய சேம்பின், சோற்றுருண்டை போன்ற திரண்ட பெரிய கிழங்கை உண்ணும். பெண் யானை கிடந்தாற் போன்ற கற்பாறைமீது ஊற்றுநீர் சேர்ந்து ஆறுபோல் ஓடும். அதன்பககத்தே உள்ள புதரில் கூதாளி படர்ந்திருக்கும். அதனிடத்தில் கொக்கு இருந்தாற்போன்று கூதாளத்தின் அசைகின்ற பூங்கொத்து விரிந்திருக்கும். அம்மலரைப் பன்றி தீண்டுதலால் பூந்தாது அதன்மீது சொரியும். அதனால் அது பொன்னுரைக்கும் கட்டளைக் கல் போலத் தோன்றும். அது பல மட்டங்களுடைய சிறிய தினையின் கதிரை மேய்ந்து இனிது கண் தூங்கும். இவ்வகையான மலைநாடனைச் சேர்ந்த நீ, நின் தோளின் பெரிய அழகு குன்றாது துணைவரைச் சேர்ந்து என்றும் கேடில்லாமல் உறைதல் கூடுமோ?

தோழி! இராப்பகல் என்னாது முகில் 'கல்' என்னு மோசையோடு மழை பொழியும். இவ்வகையான பின் பனியுடைய அக்காலத்தே தலைவரைப் பிரிந்திருப்பவர்க்கு ஆற்றி இருத்தல் அரிதென்று அவர் பிரிந்திருக்கமாட்டார். முன், தான் உன் கவலையைக் கண்டபொழுதினும் இப்பொழுது தன் கருத்தினை முடிக்கும் பண்பினையுடையர் (விரைவில் மணந்துகொள்வார் என்றவாறு.)

—பரணர்.

**179** பாலை

**இது, பிரிவுணர்ந்திய தலைமகற்குத் தோழி செலவழுங் கச் சொல்லியது:**

வானத்தை முட்டும் சிகரமுடைய பெரிய மலைச்சாரலிற் பேய்த் தேர் ஓடும். இவ்வகையாக காடு காய்ந்திருக்கு மிடத்தில் நெருப்பு நெருங்கிப் பரந்து எரியும். அதனால் காடு செல்லுதற் கரிதா யிருக்கும். அங்கு சிறிய கண்ணுடைய யானை நீண்ட கையை நீட்டியும் பெரிய வாயைத் திறந்தும் நீர் பெறாது பெரிய காட்டை வெறுத்துச செல்லும். இவ்வகையான பெரிய காட்டில், கவர்பட்ட முனை யுடைய சிவந்த அம்பும் வளைந்த வில்லுமுடைய ஆடவர், பெயரும் பீடும் எழுதி நாட்டப்பட்ட வீரக் கல்லின் பககத்தே சென்று தம்மை எதிர்த்துப் போர் செய்து வெல்வோரைக காணரா யிருப்பர். இவ்வகையான சுரத்தே செல்ல விரும்பினீராயின், இனிய நகையும் பட்சியின் இறகடி போன்று

திரண்ட கூரிய எயிறும், சிவந்த வாயும், புதிதாக மலர்ந்த குவளைமலர்போன்ற கண்ணும், பிறையை ஒத்த நெற்றியும் உடைய காதலி தனிமையால் வருந்துவாள். இவ்வாறு அவள் புலம்ப நீர்பெயர் தல் ஏற்றதோ.

—கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.

## 180 நெய்தல்

**இது, இரந்து பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறை நயப்பக் கூறியது:**

தோழி! மிகுந்த மாலை சூடிய ஆயத்தோடு மணற்குன்றின்மீது பூக்கள் செறிந்த கடற்சோலை யிடத்து வண்டல் விளையாடினேம். அப்போது ஒருவன் வேகமாகச் செல்லும் குதிரை பூட்டிய வலிய தேரை ஓட்டி வந்தான். வந்து குளிர்ந்த தடாகத்தே வளர்ந்த அழகிய குவளைப்பூவின் அரும்பிறைற் கட்டிய கண்ணியை பின்புறத்தே வந்து கூந்தலிற் சூட்டினன். உனது அழகிய இளைய முலைகளை நோக்கி நெடுநேரம் ஆலோசித்து நின்று பின் நில்லாது போயினன். இது பெரிதும் நகைக் கத்தககதா யிருந்தது. புலால் நாறுகின்ற கரிய கழி யிடத்தே துழாவி இரைகொள்ளும் புட்கள் நீண்ட இதழுடைய தாழையிடத்தே இருக்கும். தாழையோ பூவோடு, சோலையிடத்து நின்ற, வளைந்த கா லுடைய புன்னையுடன் பிணைனி நிற்கும். 'அப் புன்னையின் அண்மைய காதை நோககுவீர்களாக'

என்பர் ஆரவாரமுடைய இவ்வூரிடத்துள்ளவர்கள்.
—கருவூர்க் கண்ணம் பாளனார்.

## 131. பாலை

இது, தலைமகன் பொருள் ச்சுரந்து ஒழியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது :

செல்லுதற்கரிய காட்டைக் கடக்கத் துணிய ஆற்றுதலையாய்ப் பின்னே நின்று மீள நினைந்தாய். அவவாறு நீ செய்தனையாயின் எனது நிலைமையைக் கூறுவாயாக. வெற்றிப் போரையுடைய ஞிமிலி பகைவரது காவலுடைய மதிலைக் கடந்த மிகப் பெரும் படையை உடையவன், கொடையாற் சிறந்த எயினன். அவனைப் போரிடத்தே முருகனை ஒத்த வலியோடு போர்க்களத்தே இரத்தஞ் சிந்தும்படி எதிர்த்து, ஞிமிலி தோற்று வீழ்ந்தான். அப்போர்க களத்தின் கொடுமைபோலச் சூரியனின் வெம்மை யாகிய கிரணங்கள் தாக்கும். அப்பொழுது புதிதாக வந்த ஆராவார முடையபட்சிகளின் பெரும் கூட்டம் வாட்ட மடைந்து ஆகாயத்தில் தூரப் பறந்து செல்லும். சென்று பூக்கள் மொய்த்து மலர்ந்திருக கின்ற அம்பின் விசையோடு ஓடும கடிய நீரை யுடைய காவிரியாற்றின் மணலிடத்தே கூட்டமாக இருக்கும். காவிரியாறு வாரடித்து மணலின் கும பலை விடுகின்ற புது வருவாயினையுடைய நாடு சோழ அரசருக குரியதா யிருக்கும். இவர்களுக குரிய காவிரியாற்றங்கரையில் உலகெங்கும் பரந்த நல்ல புகழும் முதுநூலாகிய நான்மறையுமுடைய முக்கட்

செல்வரது (சிவபெருமானது) ஆலமரத்தின் கீழுள்ள முற்றத்தை பொய்கை சூழ்ந்த சோலையிடத்து மனைகளிலுள்ள பெண்கள் அழகு பெறும்படி அலகிடுவார்கள். அலகிட்டுக் கையினாற் செய்த பாவை களைத் துறையிடத்தே போடுவர். வண்டு மொய்க்கின்ற ஐம்பாலும், மூங்கில் போன்ற தோளும் உடைய தெய்வப்பெண் போன்ற வள் இருந்த மணம் வீசுகின்ற வீதியிலுள்ள பெரிய மணற் குன்று, மகரம் போன்ற உச்சியும், வானைத் தொடும் மதிலும், சிகரத்தைக் காணமுடியாததுமாகிய நல்ல வீடுகளையுடையதாய்ப் பண்டங்களால் நிறைந்து கிடக்கும் துறையுடைய புகார் நன்னாட்டதுவே.

(புகாரிடத்தே காவேரிக்கரையில் பெண்கள் ஆலமர்கடவுளின் முற்றத்தை அலகிட்டுப் பாவையைத் துறையிலிடும் இடத்தது, எனது காதலி யிருந்த மணற்குன்று என்று சேர்த்துக்கொள்க.)

—பரணர்.

## 182 குறிஞ்சி

**இது, தோழி இரா வருவானைப் பகல் வருகவென்றது :**

குறவன் வேங்கையின் பொன்போன்ற பூங் கொத்துகளைச் சூடி, வளைந்த வலிய சிலையைத் தோளிடத்தே கொண்டு, பலாவின் இனிய சுளையிடத்து விளைந்த கள்ளைச் சீழ்க்கை ஓசைவிடும் அம்புடைய இளையரோடும் இருந்து பருகுவான்; வேட்டையைத் துரத்துவதிற் றப்பாத வலிய நாய்கள் பின்னே செல்ல வேட்டைக்குப் போய் காட்

டிடத்துள்ள மல்லிகைப் புதர் இரத்தம் படும்படி முட்பன்றியைக் கொன்று வேட்டையாடுவன். இவ்வகையான மலைநாடனே! முழக்கத்தோடு கானூன்றிக் கடுமழை பொழிந்த நடு இரவில் நீர் தனியே வந்தீர். நீர் வந்தமையை நினைந்து இவள் கண்கள் நீரைச் சொரியும. ஆதலின், அதிர்கின்ற குரலுடைய முதியமந்தி மிளகுகொடி படரும் உயர்ந்த மலையின் உச்சியிடத்தில் பாய்ந்து விளையாட உதிர்ந்த வாசமுடைய அலரிபரந்து, வேலனுக்கு வெறியாடும் பெரிய களரியை நிகர்க்கும் பெரிய மலைச்சாரலிடத்தே இனி நல்ல பகல்நேரத்தே வருதல் வேண்டும். —கபிலர்.

## 183 பாலை

இது, தலைமகள், குறித்த பருவ வரவு கண்டு தோழிக்குச் சொல்லியது.

தோழி! எனது குவளைமலரை ஒத்த கண்கள் நீர் கொண்டன. அழகிய ஆபரணமணிந்த பொறியுடைய அல்குலின் அழகிய வரிகள் வாடின. யான் இவ்வாறாகவும் அரிய சுரத்தே நமமைத் துறந்து அருளாது சென்ற தொலைவிடத்தனராயும் நீண்ட காலம் தங்காரென்று கூறினாய். துயரமோ பெரிதாயிற்று. முகிற்கூட்டங்கள் குளிர்ந்த துறையுடைய பெரிய கடலிடத்தே படிந்து நீர் பருகிக் குவிந்த திரைகளை விழுங்கும். விழுங்கி மேற்கே எழுந்து சூற்கொண்டு வயாக்கொண்ட பெண்யானைக் கூட்டம் போல இடங்கள்தோறும் தோன்றும். இவ்

வகையான முகில்கள் ஓரிடத்திற்கூடிக் காலையில் கார்காலம் வநதது. மாலையில் குளிர்ச்சியடைந்த பிடவின் கூரிய முகிழ்த்த மொட்டை வண்டு ஊதி வாய்திறக்கச் செய்யும். அதனால் எழுந்த மிகுந்த நாற்றத்தைப் பனிககாலத்துக் குளிர்காற்றுத் தூற்றும். இவ்வாறு குளிர் வருத்துதலாற் கலங்கிய நெஞ்சோடு பிரிந்தோர் காரணமாக வருந்துவ மல்லமோ? —கருவூர்க் கலிங்கத்தார்.

## 184 முல்லை

**இது, தலைமகன் வினைவயிற் பிரிந்துவந்து எய்தியவிடத்துத் தோழி மகிழ்ந்துரைத்தது:**

ஐயனே! நீர்வந்து நின்றது, கடவுட் கற்போடு கூடியவளும் குடிக்கு விளக்குப் போன்ற புதல்வனைப் பெற்ற சிறப்புடையவளுமாகிய நின் தலைவிக்கு அன்றி எனக்கும இனிதாயிருககின்றது. நின் ஆயுள் சிறப்பதாக. நீ வினைமுடித்து மகிழ்ச்சியோடு வரும்போது வண்டு ஒலிககும் மலருடைய கானம் நின்தேருக்குப் பிறபடும். வெண்பிடவு கமழுகின்ற முல்லை நிலத்தில், குழுகிய மூளுமை திரண்ட கோடுமுடைய கள்ளியின் தலையைச் செழித்து வளர்ந்த மலர்ந்து மணக்கும முல்லைக கொடி மூடியிருக்கும். அவ்விடத்தே ஆர்ககுக கழனற பூககளை ஊதி நீககித் தெளிந்த நீரைப் பருகும் குறுகிய மருப்புடைய அழகிய மான், புள்ளியுடைய பெண மானோடு தஙகும். அப்பொழுது

கோலுடைய கையரும், பயிரிடத்தே களைபறிப்பவரும், கள்ளருந்துபவர்களுமாகிய மாக்கள் மகிழ்ந்து ஆடுவர். அப்பொழுது கதிர்மழுங்கிய சூரியன் சிவந்த வானத்தே செல்லும். இந்நேரத்தில் அருவி ஒலிப்பதுபோல் ஒலிக்கும் தேரிடத்துக் கட்டிய மணிகள் பல ஒலிக்க, நீர் வந்தீர்.

(நீர் வந்து நின்றது நின் தலைவிக்கன்றி எனக்கும் இனிதாகும்.) —மதுரை மருதனிள நாகனார்.

## 185 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது :**

வாடி ஒலிக்கின்ற நெல்லுடைய மூங்கில், ஆரவாரஞ் செய்யும் மள்ளரது வில்லின் விசைபோல உடையும். இவ்வாறாகும்படி கல் உயர்ந்த நிலப்பரப்பு பசுமையற்று வெம்பும். இவ் வெப்பமுடைய வழியிடத்து மழை பெய்யாது அருவி வறண்ட உயர்ந்த மலைச்சாரலில் பெரிய விழாவுக்கு ஏற்றிய தீபம்போல இலவமரங்கள் பல பூக்களைப் பூத்திருக்கும். இவ்வகையான சிறிய மலையைக் கடந்தார் என் காதலர். அழகிய ஆபரண மணிந்த வளே! எனது விளங்கும் வளைகள் கழலவும், அழகிய திரண்ட தோள்கள் பெரிய அழகு கெடவும் பெரிதும் வருந்திய நெஞ்சோடு நானிருப்பவும், அவர் பிரிந்திருக்கின்றார். அவர் அருமையைப் போலாது இன்னாத உயிருடையராய் மிகவும் கடிய நெஞ்சினராவர். —பாலை பாடிய பெருங்கடுங்கோ

## 186 மருதம்

**இது, தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப இல்லிடைப் பரத்தை சொல்லி நெருங்கியது:**

வலிய தூண்டிலால் மீன்பிடிப்போர் சுவர்க்கம் வேண்டாத அறனில்லாத வாழ்க்கையராவர். அவர்கள் தூண்டிலில் மீன் பற்றியதை யறிந்து தூண்டிற் கயிற்றை இழுப்பர். இவ்வாறு மீன்கள் மிகுந்திருக்கும் மடுவிடத்தே தாமரை, செருந்தி வளர்ந்திருக்கும். நீரின்மீது மிதக்கும், நீண்ட தாளில் நிற்கும் அதன் அகன்ற இலை, பெரிய மடுநீர் அசையும்படி காற்றடிக்குந்தோறும் பெரிய யானையின் செவிபோல அசையும். இவ்வகையான மருதநிலத் தலைவனோடு நாம் கூடியிருந்ததனால் எழுந்த பழி வார்த்தைகள் பெரிதாயின. பெரிய குத்துக்கோலை யுடைய யானையாகிய தெப்பம் துணையாக புனலாடிய அவ்வளவுமே அவனது உறவாகும். அவனது மனைவியோ ஒள்ளிய வளையணிந்த பாடன் மகளிர் பழைய யாழை மீட்டுப் பாட, குளிர்ந்த முழவில் அடிக்கும் குறுந்தடி ஓசைபோல, தன்னை அணிந்த தோள்களால் பரத்தையைத் தழுவி நின்றானும் பிறனிடத்தனையினை, தன் கணவனை என்னை வெறுத்துக் கூறுவள் என்று பிறர் சொல்லக் கேட்டேன். வெள்ளும் வேலும் மழைபோற் சொரியும் அட்டபட கரிய பரிசையும் உடைய [illegible]னின காவிரிக்கரையிற் போரைப்போல [illegible] கிய வளைகள கழல்வதால்) உடைதல் [illegible]

யாகும். உண்மையில் யாம் அவள் பகையினளல் லேம். சேர்ந்தவர்களது அழகிய நெற்றி பசப்ப நீங்குகின்ற கணவனிடத்தில் அவள் பகைகொண் டிருத்தல் ஏற்றது. —பரணர்.

### 187 பாலை

### இது, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது

காதலர் தோள்களின் வருத்தம் அகலும்படி நம்மோடு பல நாட்கள் துயின்ற நீண்ட களவுப் புணர்ச்சி நாணந் தருகின்றமையின், அதனைவிட்டு நீங்கினர் (மணந்துகொண்டார்). இப்பொழுது அவர் தூரத்தே அரும்பொருள் பெறுதற்கு ஏவு கின்ற நெஞ்சமோடு சென்று நமது வருத்தத்தை நினைக்கின்றார் அல்லர். தோழி! பகைத்தவரின் பகைப்புலத்தை அழித்த வேகமுடைய குதிரையும், பெரிய வீரககழலுமுடைய வலிய கண்ணுடைய வீரர்களது பூமாலை விழாவின் முதல் நாளைப்போல, மணல் கொண்டுவநது பரப்பபபட்ட வீட்டின் முற் றம தனிமையுறு மல்லவோ? அவர் செல்லும் சுரத்தில் உயர்ந்து வாடிய தலையுடைய ஞெமை மரத்தின் அடியில் குரங்குகள் சேர்ந்து இருககும். அதன் அருகாமையிலுள்ள சிறுகுடியிடத்து கோழி கள் இராக்காலத்தே தங்கியிருககும். கரிய அடி யுடைய யாமரத்தின் கவர்பட்ட அழகிய தளிர்கள், வீட்டில் உறையும் அககோழியின தாடி போன் றன. யாமரம் நிற்கும் வெப்பமுடைய மலையிடத் துக கானல் காய்தலின், மககள வெறுத்துக் குடி

யெழுந்து சென்றமையின், சூரியன் ஒளி தோன்று கின்ற நேரத்தில் பசிய கண்ணையுடைய யானை, அவ்விடத்தில் நின்று பனங்குருத்தை உண்ணும். அவ்வியானை, விடியற்காலத்தில பகற்பொழுதை விரும்பி நித்திரைவிட்டெழுந்த பரதவர், கையை அசைத்து, வாள் போன்ற சுறுத் திரியும் குளிர்ந்த துறையைக கடந்து செல்லும் மரககலம்போற் றோன்றும். இவ்வகையான கரியமலை அவர் சுரத் துக்கு எதிரே கிடக்கின்றது. —மாமூலனார்.

## 188 குறிஞ்சி

### இரு, இரவிற் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது :

பெரிய கடலிடததே நீரை முகந்த பெரிய கூட்டமான முகில், மலைகள் உயர்ந்த விசும்பில் வலமாக எழுந்து, போர் முரசைப்போல முழங் கும, நீதி அரசுபுரிந்து அறனறிந்த மன்னரது அரிய போரிடத்து எதிர்த்த இளம்வீரர் உறை கழித்து வீசிய வாளைப்போல் மின்னும். இவ் வியல்புடைய மேகமே! கூட்டமாகச் சேர்ந்து, வீணே இவ்வாறு ஆரவாரம செய்கின்றையோ? பொன்போல் மலர்ந்த வேங்கையின் மிகக பூவைச சூடி அழகுபெற்ற ஆயத்தாரோடு தழையைச சுழற்றியும், தட்டையைத் தட்டியும, கிளிகளை ஓட்டி யும், அழகிய அசோகந்தளிரை வீசியும, குறமகள் தினை காக்கின்ற பக்கங்களிலும் மழையைப் பெய் வையோ? —விரைவெளியன் தித்தன்.

## 189 பாலை

**இது, மகட்போக்கிய செவிலி சொல்லியது :**

பசிய பழமுடைய பலா நிற்கும் காடு வெம்பி, வானம் வருந்த வேனில் நீடி, நீர்நிலைகள் வறண் டிருக்கும். இவ்வகையான பாறைகள் உயர்ந்த இடத்தே, நீண்ட மூச்சுவிடுகின்ற இளம்பெண்யானை யைக்கொண்டு, வேறு நாட்டுக்கு விழாவுக்குச் செல் லும் மள்ளர், முழவை எடுத்து அடித்துப் பெரிய யானையைக் குழியிடத்தே விழுத்துவர். இவ்வகை யான பக்கமலையிடத்தது வெப்பமான மலைப் பாதை. வயலைக்கொடியின் பிணையல் போன்ற கூந்தல் தொடுகின்ற தொடையும், பொறியுடைய அல்குலும் உடைய சிறுமி, அவனோடு அச்சுரவழியே சென்று பிறனுக்கு உரியள் ஆயினள். அதனை என்றும் நினைந்து துன்பம் மிகுந்து வருத்தத்தோடு திசைகளெல்லாம் தேடி, வீட்டிடத்தே மயங்கியிருக் கும் என்னிலும், மனையிடத்தே துன்பத்துடனிருக் கும் நல்லவர்கள் உண்டோ ? தேர் செல்லும் தெரு வில் இனிய வாத்தியம் ஒலிக்கின்ற ஊரை இழந் ததுபோலாகும் யான் இழந்த பொருள்.

—கயமனார்.

## 190 நெய்தல்

**இது, தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது :**

கடற்கரையிலே பரதவர் மகளிர் கையிடத்தே நிரையாக வளையணிந்த தோழிமாரோடு உப்புக் கும்பங்களில் ஏறி நின்று, பொழுது படும்போது

வருகின்ற தோணிகளை எண்ணுவார்கள். இவ்வகை யான கடற்கரைத் தலைவன் செய்த கொடுமையை ஊர் அலர் தூற்றும். அதனால் அவள் வருந்துகின்ற நீர்வடியும் கண்களால் நிமிர்ந்து பார்க்கமாட்டாள். அன்னையே! வருந்தாது கேட்பாயாக. சோலையிடத் துள்ள உயர்ந்த புன்னைக கொம்பரில் புதிய நாரை வநதிருககும். அந்நாரை வெருண்டு பறக்கும்படி மிகவும் அடிக்கின்ற குளிர் காற்றோடு திரையும் மோதும். அவ்வகையான வளைந்த கடற்கரை யிடத்தே அவன் வருதலுமுண்டு. பெரிய கழி யிடத்தேயுள்ள முகத்தே வெற்றியுடைய சுறுமின் கள் துள்ளிப்பாயும். இவ்வாறுகவும் பாகன் தேரை ஓட்டுதலால் உப்புப் பாத்திகள அழிந்து பயன் குன்றும். உப்புப்பாத்திகளை அழிககும தொழி லுடைய நிரைத்த மணியணிநத குதிரைகள விரைந்த நடை ஓயுமபடி பெரிய மிருதுவான கடறகரை மணலிடத்தே அசைநது பரந்துவரும. இவவகை யான குதிரைகளையுடைய துறைவன் வருவான். வந்து இவ்விடத்தில் மாலைக்காலத்தில் நிற்றலிற் றவறமாட்டான். —உலோச்சனுர்.

## 191 பாலை

இது, தலைவன் தனது நெஞ்சிற்குச் சொல்லிச் செல வழுங்கியது :

காலின் தோலை மறைககும் செருப்பும், கையிடத்தே கோலுமுடைய உமணர், வழியிடத் துள்ள பாதிரிமரத்தின் பஞ்சுபோன்ற தலையுடைய

புதியபூவை நெருப்புப்போன்ற இதழுடைய அலரி யோடு இடையேவைத்து, நல்ல ஓலையினுற் தொடுத்த வண்டுகள் மூசுகின்ற மாலையை அணிந்திருப்பர். இவர்கள் கூட்டமாகச் செல்லும் செலவு ஒரு ஊர் (குடி எழுந்து) செல்வதைப்போல இருக்கும். உப்பைச் சுமந்து, அரிய சுரத்தைக் கடக்கும் வலிய தாளுடைய நல்ல மாடுகளின் கழுத்திற் கட்டிய விளைந்த மணிகள் விடும் ஓசை, உமணர் இதழை மடித்துவிடும் சீழ்க்கை ஓசையோடு சேர்ந்து செல்லும். சென்று ஓமை மரமுடைய பெரிய காட்டிடத்தே வரும் முதியமாக்களுக்கு ஆபத் தின்மையை அறிவிக்கும். இவ்வகையான நீண்ட வழியிடத்தே அரியபொருளை விரும்பிக் காதலியைப் பிரிந்து உறையவல்லையாய் சென்று வினைசெய்ய எண்ணினையாயின். அது நன்றாயிருந்தது. எனது நெஞ்சே, சொல்லுகின்றேன் கேட்பாயாக: நிரைத்த முகையுடைய முல்லைக் கொடிபோல மெல்லியளாகி, அறல் போன்று விரிந்த தழைத்த கூந்தலுடையவள் தேறியிருப்பாள் என்று வலியைதைக் கூறவும் நீ வல்லையோ?

—ஒரோடோகத்துக்கந்த ரத்தனர்.

## 192 குறிஞ்சி

இது, தோழி தலைமகனைச் செறிப்பறிவுறீஇ இரவுக்குறி மறுத்தது:

சந்திரன் இருந்தாற் போன்ற குற்றந்தீர்ந்து விளங்கும் நெற்றி பொன்போல் நிறங்கொண்டது.

அவள் அருநோயினால் என்னாகுவளோ? வான வில்லைப்போன்ற பசிய ஆரமும சிவந்த வாயு முடைய சிறுகிளி, கதிர் சிதையும்படி ஆய்ந்து, தாககமாட்டாமையால் விட்டுச்சென்ற வளைந்த புல்லிய புறமுடைய கதிரை வளைந்த சிறகுடைய கோழி, தன் கிளையோடிருந்துண்ணும் தினையும், வளைகின்ற கதிரை ஈன்றன. நீ அவளுககு நடு இரா வில்வந்து அருள செய்வாய் எனிலோ, பெரிய மலை யின் இருணட வெடிப்பைத் துடைத்து ஒய்யென அருவிகொண்டுவநத, அரவு உமிழ்ந்த திருமணி பெரிய வரையிடத்துளள சிறுகுடியின் வீதியை விளககும. அதனால் அனபுடையவள இராககாலத் தையும இழந்தனள. இடியேறு தஙகுகின்ற உயர்ந்த உச்சியுடைய பெரியமலை நாட! அவள் இரஙகத்தகக ளாவள். உனது அகன்ற மார்பே இனி அவளுக் குத் தஞ்சம.

—பொதுமபில் கிழான் வெஙகண்ணனார்.

## 193 பாலை

இது, பொருள் வலிந்த நெஞ்சிற்குச் சொல்லித் தலை மகன் செல வழுஙகியது:

வில்லையே ஏராகவுடைய ஆறலை களவர், காட் டிடத்துள்ள கவர்ப்பட்ட வழிகளையல்லாமல் சுவர்க் கத்தை வேண்டாதவர்களாவர். ஒரு நல்லநாளில் கிடைத்த நல்ல வேட்டையை இவர்கள், தங்கிளை களுடன் போர்செய்து கொன்றனர். அதனாற்

போர்க்களத்தே சிந்திய இரத்தம், ஊனைக் கவரும் எருவையின் வாயிலும், வெண்ணிறக் கழுத்திலும் தெறித்தது போன்றிருக்கும். அது குறிய மலையிடத்தே வளர்ந்த நீண்ட அடியுடைய யாமரத்தின் உயர்ந்த கொம்பின் கவர்களுக்குள் இருககும் தன் பிள்ளைக்கு இரையை ஊட்டும். அப்பொழுது, வயாவழுக்கிக் கீழேவிழுந்த இறைச்சித்துண்டைக் கொல்கின்ற பசியுடைய முதியநரி உணவாகக் கொள்ளும். மனமே! இவ்வகையானவழி நமககுச் செல்வதற்கு எளிதன்று. நெஞ்சே! அழகிய மனையிடத்தே, பல மாட்சிமைப்பட்ட அழகும் இனிய மொழியும், இறகின் அடிபோன்ற பல்லும் உடைய இளையவளின் பெரிய தோள்களிடத்தில் இனிய துயில் கொள்வதைக் கைவிடமாட்டேன்.

—மதுரை மருதனிள நாகனார்.

## 194 முல்லை

இது, பருவங்கண்டு ஆற்ருமையீந்த தலைமகன் சொல்லியது :

பொழுது புலர்கின்ற வைகறைக் காலத்தே பெருமழை பெய்தது. ஏர்பூட்டி உழுது மறுத்த புழுதி புறம் மாறுபட்டது. இவ்வகையான செம்பாட்டு நிலத்து ஈரத்தே ஊனைக் கிழித்தாற் போன்று உழுத சிவந்த மேடுடைய சாலில் விதைத்த தானியங்கள் முளைத்திருககும. பல மான் கூட்டங்கள் பரந்தன போன்று வரியுடைய தலைப் பட்டை சூடிய பயிர் விளைவிப்போர் ஒலிககின்ற

பறை ஓசைபோல் ஆரவாரித்துக களை பறிப்பர். இவ்வாறு விளைவிககப்பட்ட வரகின் கவர்பட்ட கதிரை ஆய்ந்து உண்ட குடுமியுடைய பெரிய மயில், அழகிய தோகையைப் பரப்பிக் களிக்கும். களித்து, கொல்லை உழவர் காடுழும்பொழுது அழியாமல் விட்ட வலிய இலையுடைய குருந்தின் வளைந்த கிளை யிடத்திருநது கிளியோட்டும் மகளிரின் சீழ்க்கை ஓசைபோலச் சத்தமிடும். தோழி! இவ்வகை யான கார்காலம் இதுவானல், இது, தாமரை மொட் டுடைய உயர்ந்த தேரிடத்துப் பூட்டிய வேகமுடைய தும், பரந்த பிடரி மயிருடையதுமாகிய குதிரையை ஓட்டி வருவேன் என்று தலைவர் தெளிவித்துச் சென்ற காலமாகும்.

—இடைக்காடனர்.

### 195 பாலை

இது, மகட் போக்கிய நற்ருய் சொல்லியது:

ஊரவர்கள், தாயே! அரிய வழியே சென்ற எனது பெரிய தோளையுடைய சிறுமி, நல்ல வேலை யுடைய தலைவனேடு வருவாள். தொழில் மாட்சி மைப்பட்ட வீட்டின் சுவர்களுக்குச் சிவப்புமண் ஊட்டி, மணல் பரப்பப்பட்ட முற்றத்தே மாலை தூக்கி மகிழ்ந்திருப்பாயாக, எனக் கூறுவர். மான் போன்ற நோக்குடைய இளைய அவளைப் பெற்ற நட்பிற்காக அவன் அருள் செய்யானயினும், விளங்குகின்ற பல்லுடைய ஏழையைப் பலநாள் கூந்தல் வாரி முடிந்து நாரியில் தூக்கி வளர்த்த

நன்மைக்காகவாவது அருளுவானோ. அதை அவன் நினைப்பானோ? அந்நன்மையை நினையானோ? ஆடை வைத்து முடிந்த பெரிய குடுமியும், சிறு பையைத் தலையிலே கட்டிய பல கவர்பட்ட வளைந்த கோலையும் உடைய, வருங் காரியத்தை அறிந்து கூறுவதிற் பழகிய வாயையுமுடையவேல! உனது கழங்கின் திறமையை ஆராய்ந்து கூறுவாயாக. பனி மாறாது வந்து தூறும் இராககாலத்து மிகவும் வருந்துகின்ற எனது கண்கள் தூங்கும் பொருட்டு அவன் என்மனைக்கு அவளை முன்னம அழைத்து வருவானோ? அல்லது தன மனைக்கு அழைத்துச செல்வானோ? என்று கூறுவாயாக.

—கயமனார்.

## 196 மருதம்

இது, பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகற்குத் தலைவி சொல்லியது :

கள்ளு மிகுந்த மருதநிலத்தூரிடத்தே துகிற் கொடிகள் அசையும். பாணன பகற்காலத்தே துறையிடத்துத் தூண்டிலிடப்பட்ட பெரிய திரணட வராலின், துடியின் கண்போன்ற கொழுத்த ஊனை விற்றுக கட்குடித்து வேட்டம் மறந்து உறங்குவான். இவ்வகையான கணவனுக்குப் பாண்மகள பிரம்பின் இனிய புளியைவிட்டு விடியற்காலையில் சோற்றுக் குவியலை ஆம்பலின் அகன்ற இலையில் படைத்துப் பரிமாறுவாள். இவ்வகையான ஊரையுடையவனே! பகைத்து வந்து பொய் பேசும் கோசகரைக்

கொன்று பகையைப் போக்கிய கடிய தேரையுடைய திதியன், அழுந்தை ஊரின் வளைந்த குழையுடைய அன்னிஞிமிலி போன்றவர்களை ஒத்த விரும்பத்தக்க நின், பரத்தையைத் தழுவிய மார்பைத் தீண்டமாட்டேம். தந்தையே, கிட்டவராதிர்: நின்தவறு எமது கண்ணின் அழகைக் கெடுத்தது. —பரணர்

## 197 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது:**

கண்களும் பூவின் வண்ணத்தை இழந்தன. தோள்களும் மலர்போல் நெகிழ்கின்ற அணைகளினும பார்க்கச் சோர்ந்தன கண்டவர்கள் ஆசைப் படும்படி அலங்கரிககப்பட்ட பழைய அழகு இழந்து துயரமுடையோமாயினேம் எனறு வருந்தாதி. தோழி, கேட்பாயாக. முனையிடத்தே பொருத முனைநதவர்களை ஒட்டிய வெற்றிமிகுந்த சேனையையுடைய கண்ணனெழினியின் இனியமலையைக கடந்து சென்றார் நின்காதலர்.

மலர் சூடிய, தாழநத இருண்ட நெருங்கிய கூந்தலுடையவளைத்தழுவிய வீரமுடையவனது மார்பிடத்தேபுல்லிய தலையுடைய சிறுவன் ஊர்ந்து இறங்கினாற்போல, மிகக கருப்பங்கொண்ட இளம்பிடியைத் தழுவிய வெள்ளைக் கோட்டினையுடைய ஆண் யானை, தன் மீது கன்று ஊரநது இறங்கும்படி நித்திரை

கொள்ளும். இவ்வகையான குளிர்ந்த சுரத்தைக் கடந்து விளங்கும் பூங்கொத்துடைய கொன்றை மரம் உயர்ந்து நிற்கும் மலைவழியை வினைமுடிக்கும் நெஞ்சோடு பிரிந்துசென்ற அவர், நின்வளை கழலும் படி நீளத்தாமதிக்கமாட்டார். —மாமூலனார்

## 198 குறிஞ்சி

**இது, புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:**

கூறுவேமோ? கூறாது விடுவேமோ? என மறைத்து வைத்திருக்கும் காமம் கட்டில் அடங்காது, விரும்பி நாம் கூறிய நல்லவார்த்தையை விரும்பி, கரியவாசம் நாறும் கூந்தலையுடையவள் நடுச்சாமத்தே விழுகின்ற மழையில் மறைந்துவந்து அழகிய மாலையணிந்த மார்பைத் தழுவினாள். அவள், மலைபிடத்தே மழைத்தூறல் சூழ்ந்த இளமயில்போல, வண்டுகள் பின்னே செல்லக்குளிர்ந்த மலர்களைச் சூடி, (இருணபகக்கூம்) விலைப்போற் செய்யப் பட்ட வளைந்த காற்சிலம்பின் ஒலியை அடக்கி, ஊர் உறங்குகின்ற யாமத்தே வந்து நின்று அருகினள். மயங்கிப் பெயர்கின்ற அவள் பெரிய கற்பிற்சிறந்த அப்பெண்தானோ? அல்லளோ? இந்நாட்டில் தெய்வப் பெண்களுறையும் அயிரமலைச் சாரலில் அழகிய சுனையில் உறையும் நீர் உறை தெய்வப்பெண்ணோ? என்று என் நெஞ்சம் அஞ்சும்.

—பரணர்.

**199**

**இது, பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது :**

*கரையிடத்தேபாய்கின்ற வெள்ளிய திரையைப் போல, மலையிடத்தே நிற்கும், ஆச்சாமரத்தின் மலர், காற்றடித்தலிற பலதிரைகளாகவிழும். அவ்விடத்தே மழையின்மையால் வற்றிய யானை, நீர்வேட்கையால் வருந்தும. சிலம்பிவலைபின்னிய இலையில்லாத வற்றிய ஐதநிழலிடத்தே திரிந்து, வாடிய மரலைச சுவைத்த துயருற்ற மான் கூட்டம் நிற்கும். அரத்திலை அராவிய ஊசிபோன்ற பல்லுடைய செந்நாய் வருதலின், காற்றின் எதிர்ப்பட்ட பூளையைப்போல ஒய்யெனறு அலறிககெடுதி எய்திய மானகூட்டம் கலைமானை அழைககும. இவ்வகையான, சூரியன் படுகினற மாலைக காலததில் ஆணடலைக குருவிசேழககை அடிப்பதுபோல் ஒலிக்கும். கடலபோனற காடு பின்னகை எதிலர்ப்போற் செலலும் எனது போககிற்கு, எனது ஆசையுடைய நெஞ்சம், அசைவில்லாது செல்லவேண்டுமாயின் நெஞசே! நீதான செல்லற்குரியை. (யான்செல்லமாட்டேன எனறவாறு).*

*பொன்போற பூக்கும் வாகையுடைய மேம்பட்ட துறையிடத்துச செருவிடத்துப், பொன் அணிந்த நன்னன் போர்ககளத்து மடியுமபடி வெற்றியை அளிதத வாளுடைய கலங்காய்க்கண்ணி நார்முடிச் சேரன் இழநத நாட்டைப் பெறுவதானலும பெரிய*

தோழையுடைய என்காதலியை விட்டு வரமாட்டேன். —கல்லாடனார்.

## 200 நெய்தல்

**இது, தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறை நயப்பக் கூறியது :**

ஐயனே! எமது சிறிய குடில் வீடுடைய ஊர், நிலாவிலே விளங்கும் மணல் மிகுந்த வீதியிடத்தே புலால் நாற்றம் நாறும் சேரியிடத்துள்ளது. சிறிதாயம் நீரால் சூழப்பட்டும் இனிமையில்லாததுமாகிய வீடாயிருந்தபோதும், இன்பமனுபவித்து ஒரு நாள் இங்கு இருப்போர்கரு மறுநாள் (இப்பதியின் சிறுமையை உணராது) அவா தமது ஊரை மறந்திருககும தன்மையுடையது எமதுபதி. ஆதலில், அவ்விடத்துச் செல்வீராக. பெரிய திரை 'கம்' என்று மோதி உடைகின்ற மரம் உயர்நத சோலையின் ஒரு பககத்தே இருந்து பலவற்றைப் பாராட்டிப் பகற்காலத்தை எம்மோடு கழித்துப் பொழுதுபட நல்ல தேரிற் குதிரையைப் பூட்டுதலையும் செய்வீர். அதுசரியன்று. சேர்ந்த நீர், செலகுவீராயின் நாமும் எங்களவில் அருமை செய்வோம். உமககு ஏறறது எது வென்று எனக்குச் சொல்வீராக. உலோச்சனார்.

## 201 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது :**

தோழி! கேட்பாயாக. புகழ் மலிந்த சிறப்புடைய கொற்கை, பொன்னிலும் விளங்கும் அழ

குடைய மணிபொருந்திய நெற்றிப் பட்டமணிந்த போர் செய்யும் யானையையும், வெற்றி தருகின்ற போரையுமுடைய பாண்டியனுக் குரியது. கொற் கையின் முன்றுறையிடத்து, தழையுடை யுடுத்தவர் களும், பக்கம் உயர்ந்த அல்குல் உடையவர்களு மாகிய பழையர்மகளிர் விளங்குகின்ற முத்தோடு வலம் புரிச் சங்கையும் சொரிந்து துறையிடத்துள்ள தெய்வத் தைப் பரவும் போது பொழுது மறையும். அப்போது கடலிடத்தே பூரணசந்திரன் விளங்கினாற்போல அலர் மன்றிடத்ததாயிற்று; அன்னையும் தூங்காத கண்ணளாய் பெருமூச்சு விடுகின்றாள், என்று வருத்த டைந்தாள்.

மூன்றலை கிடக்கும், வானை முட்டும நிலை யுடைய குன்றின் பக்கமலையிலே, பெரிய கையும பெரிய வாயுமுடைய ஆண்கரடி, இருளைத் துணித் துப் போட்டாற் போன்று குமபலாகிய மயிரை யுடைய குட்டிகளையுடைய தோலமுலையுடைய பெண்கரடியோடு விளையாடும் வேனில் மிகுந்த சுரத்தைக் கடந்தவர், சோழருடைய பொன்னொற் களஞ்சியம் போன்ற செலவத்தைப பெற்றாலும் அவ்விடத்தில் தங்கி நிற்கமாட்டார்.

—மாமூலனார்.

## 202 குறிஞ்சி

இது, இரவுக் குறிக்கண் வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவு கடாயது.

விளங்குகின்ற வெள்ளியநீருடைய அருவி

பாயும குன்றத்துச் சாரலிடத்தே சிறிய தலையுடைய இளைய பெண்யானைக கூட்டத்துககு அரணகப், புலியாகிய பகையை வென்ற புண்மிகுந்த யானை, பாறையுடைய மலையில் கையைத் தூக்கி ஊதும். அதனல் வேங்கையின் பூங்கொத்து, கொல்லனது மிதித்து ஊதுகின்ற துருத்தியுடைய உலையில் ஊதியபோது எழும பொறிபோலப் பொங்கி எழும். எழுநது பல மினமினிப்பூசசிகள போல நீலநிற விசும்பிற பறககும. இவ்வகையான மலைநாட்டை யுடையவனே! நடுசசாமததுப் புள்ளியுடைய பாம் பின் பசிய தலை அற வலிய இடியேறு இடிககும மலையிடததுத துணிவோடு வேல் துணையாகச, செறிந்த இருள பரந்த பாறைகளிடத்துள்ள ஒற்றையடிப் பாதையில் ஆபத்தை உணராமல் வரும் உம்பொருட்டாக, மிகக நோய்தரும துனபத தைக கடப்போர் எம்மையன்றி வேறு யாரும் உளரோ !

—ஆவூர் கிழார் மகனர் கண்ணனர்.

## 203 ...

இது, ... போக்கிய தாய் சொல்லியது :

அவர் தூற்றுகின்ற பெண்கள, அவள் மகிழுவா ளாயினும வெறுப்பாளாயினும் அவளைப் பெற்ற தாய் அறியட்டும் என்று இருககமாட்டார்கள். உன் மகள இன்னள இனையள் எனப் பலநாள வநது அவர்கள எனககுரைத்தனர். இவள் நாணுவ

வென்று அதனை ஆய்க்கு உரையேனாயினேன். இவ்வாறு அதனை நன்றாக மறைத்து வைத்திருந்த யான், இவ்வெறும் மனையிடத்தே தனித்து இருக்க, அவள் இதனை அன்னை அறியின் இவ்விடத்தில் இருக்கும் வாழ்க்கை இனித் தனக்கு எளிதல்ல என்று நினைத்து, வீரக்கழலணிந்து விளங்கும் நீண்ட வேலுடைய தலைவன் முன்னே செலுத் தான் பின்னே பல மலைகளுடைய அரிய சுரத்தைக் கடந்து சென்றாள். அவளுக்கு நன்மை என் சொல்லினால் உண்டாவதாக. மான்களுக்கும் மயக்கஞ் செய்கின்ற மலையிடத்துள்ள ஒடுங்கிய வழியிடத்தே வருந்தி இடையூறடையாது சென்று, புல்லென்ற மாலைக்காலத்தில் முன்னேயுள்ள தனித்த ஊராரிடத்து விருந்தாக இருந்து செல்வாளாக. நீ ஒலித் திருந்த, தலைப்புக் குழையுடன் அசைகின்ற கொடிச்சி வேலியுடைய வீட்டில் இருக்கும் பொன்னார் பாருந்து வேறுகை.

—[illegible].

## 204 முல்லை

இது, வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகற்குச் சொல்லியது:

கடல் போன்ற தானையும், செருக்குடைய குதிரையும் உடைய பாண்டியனின் வெண்குடை உலகந்தோன்றிய காலந்தொட்டு நீங்காது நிழற் செய்து வருவதாகும். அவன் வெற்றிப்போர் செய்த மிகப் பெரிய பாசறையிடத்தே சென்

றிருந்து வினையை முடித்தேம். ஆகலின், இன்றே உனது நல்ல அழகிய தேரை மிக விரைவாகச் செலுத்துவாயாக. நாம் செல்லும், மழைபெய்த அழகிய முல்லைநிலத்தில் கூட்டமான வண்டின் கூட்டம் மணம் கொள்கின்ற முல்லைப்பூக்களை மாலைககாலத்தில் மூசும். இவ்வாறு மாலைப்பொழுது வராநிற்கும். வெள்ளிய நெல்லை அரிவோரின் மடிந்த வாயையுடைய மத்தளம், பல மலர்பூத்திருக்கும் பொய்கையிடத்தே இருக்கின்ற புட்களை ஒப்புகின்ற, காய்ந்த நெல் வயல்களைப் புறத்துடைய சோலை, வானனது; அவனது சிறு குடியிடத்துள்ள சோலையைப்போல் மணகமும கூந்தலும் ஒள்ளிய வளையலு முடையவளது இரண்டு தோள்களைப் பெறுவதற்கு விரைவாக ஓட்டுக. (மாலைப்பொழுது வந்தது; வளையலுடையவளது தோள்களைப் பெறும் பொருட்டு விரைந்து தேரைச் செலுத்துக என்று சேர்த்துப் பொருள் கொள்க.)

—மதுரைக காமககணி நப்பாலத்தனர்.

## 205 பாலை

இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி, வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது:

தோழீ! எனது காதலர் இருவர் உயிரும் கலந்து ஒன்றிய பழைய நட்புடைய குற்றமில்லாத நெஞ்சோடு பொருந்தினர்போல 'தையால்'! யாம் உன்னைவிட்டுப் பிரியேம் என்று கபட நெஞ்சோடு தெளிவாகக் கூறினர். இவ்வாறு கூறியவர் அவ்

வார்த்தைக்குக் கட்டுப்படாதவராய், இப்பொழுது நோய் மிகுந்து வருத்தமோடு நெற்றி பசப்பூரவும், நாம் அழவும் விட்டுப் பிரிந்தார்.

மழைக காற்று வீசுகின்ற முன் பனிககாலத்துப் பெரிய இருள் நீங்கப் (பின் பனிக்கால முண்டாகும்). அப்பொழுது நீண்ட மூங்கில் வளர்ந்த நிழலுடைய மலையிடத்து ஆண்யானையின் மதம் பாயும் சுவட்டின் பக்கம் கெடப்பாய்ந்து, ஊர்ந்து இறங்குகின்ற அழகிய தலையுடைய புலியின் வரியுடைய தோலைப்போல, விடியற்காலையில் மலர்ந்த வேங்கையின் கொழுத்த மலர் உதிருமபடி உயரிய கொம்பர்களிடத்தில் குரங்குககூட்டம் ஏறிக் குழறிக கூத்தாடும். இவ்வகையான மலையிடத்துள்ள சிறுவழியிடத்துக் கற்கள் செறிந்த அரிய வழியிடத்தே குறுககே கிடககும மொழி வேறுபட்ட தேசத்தே காட்டைக் கடந்து சென்றார்.

நாம் அழும்படி பிரிநதாராயினும அவர், மெய்மொழி உடைமையின் தூரத்தே விளஙகும் புகழுடைய கோசரின் விளஙகுகின்ற படையைக் கொன்று நாட்டைககொள்ளுகிறதற்குக கோபித்த பொன்பூண் அணிந்த நின்னியின் பூவிரிந்த நெடிய கழியின் நடுவே இருககும் பெரிய சோலையுடைய காவிரிப்பட்டினம் போன்ற செழுமையுள்ள நகரிடததே தமது இல்லில் இருந்து உண்கினறவர்கள் மகிழும்படி பெரிய பொருளைப் பெறுவாராக.

—நககீரர்.

## 206 மருதம்

**இது, வாயில் வேண்டிச் சென்ற விறலிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது :**

*பேடிப்பெண் தன் அழகைக் கொண்டாடினாற் போல நடுப்படியாகப் பெருத்த வளைந்த கொம்புடைய எருமையின் மயிர் அழகு பெற்றுள்ள முதுகிடத்தே சிறிய தொழில்களைச் செய்கின்ற சிறுவர் ஏறியிருந்து செல்வர். அவர்கள் தூரத்தே வருபவர்களுக்குப் பாறைமேல் இருக்கும் குரங்கு போன்று தோன்றுவர். இவ்வகையான மருத நிலத்தையுடையவன் மாரிகாலத்துக் குளிர்ச்சியுடைய மாந்தளிர்போல மாமைநிறமுடைய மேனியும் அழகிய ஆபரணமும் அணிந்த பரத்தையரின் முத்துமாலையணிந்த குவிந்த முலையுடைய மார்பகத்தே அடங்காத காதலோடு பூமாலை கசங்கும்படி மேளவாத்தியம் ஓயாத விழாக்களுடைய பெரிய ஊரிடத்தே கலியாணங் கொண்டாடுவான். ஆதலின், வெல்லும் போருடைய வேளிரின் வீரை முன்துறையிடத்து வெள்ளுப்பின் குவியல் பெரிய மழைக்கு உருகியதுபோல, தலைவி புலத்தலினால் அழகிய ஆபரணங்களும் மிருதுவான தோள்களும் நெகிழ்ந்தன.* —மதுரை மருதனிள நாகனார்.

## 207 பாலை

**இது, மகட் போக்கிய தாய் சொல்லியது :**

*அழகிய கடல்நீர் பரவிய உப்பு வயலில் காய்ந்து உண்டான வெள்ளிய கல்லுப்பை மேற்*

குப்புறத் தேயங்களுக்குக் கொண்டு செல்லும் பொருட்டு, புட்சகுனம் பார்த்துப் பெரிய கூட்டத்தின ராய் உமணர் புறப்படுவர். நிரையாகப் பாரத்தைச் சுமந்து செல்லும் நரைப்புறத்தையுடைய கழுதை களின் தேய்ந்த குளம்புகள் உதைத்ததினால் வழி யிடத்தே கல்லுகள் புரண்டு கிடக்கும். இவ்வகை யான கொடிய வழியிடத்தே கவர்பட்டுச் செல்லும் பாதையில் வண்டுகள் ஒலிக்கும் மதத்தை மறைத்து விடுகின்ற மதம் பாயும் சுவடு உடையதும், வெய்யில் தின்னுதலால் வருந்தியதுமாகிய நீண்ட கொம புடைய ஆண்யானை, புரளுதலால் பெரிய கையின கரடு முரடு சேறுபட்டு ஒப்பரவாகச் கூவலிற் கிடக் கும். அக்கூவலில் தெளிந்து நிற்கும் குறைக்குட உவர்நீரை அறனில்லாத அவள், [illegible] வரப் பெருமூச்சு விட்டுப் பிற [illegible] வியர்ப்ப உண்டாள். இவ்வகையான நீரை உண்ட வள் தேன் கலந்த துழாவிய இனிய பாலைக் கையில் ஏந்தி, அவள் தலைமயிரைத் தடவி, இனிய வார்த்தை களைக் கூறவும் உண்ணமாட்டேனென்று மறுத்துக் கூறி வெறுத்த உள்ளமொடு அதனை உண்ணாதவ ளாவள்.

—மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார்.

## 208 குறிஞ்சி

இது, புணர்ந்து நீங்குந் தலைமகன் றன் நெஞ்சிற்குச் சொல்லியது:

பெரிய வாயிலிடத்தே நின்று தேன் முதிர்ந்த (தனது) கொடுமுடியுடைய மலையைப் பாடுகின்ற மெல்லிய கோலைக் கையிலுடைய பாணர் கேட்பின், வெள்ளிய கோட்டையுடைய பெரிய யானையைக் கொடுப்பான். கொடையிலும் அன்பிலும் சிறந்த வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்னும் அரசன். அவன் பாழி என்னும போர்க்களத்தே ஆபரண மணிந்த யானையும அழகிய தேருமுடைய மிஞிலி என்னும் வேந்தனோடு நடுப்பகலிற் செய்த விளங்கும வாள தெரியாமல விசையுடன் வெட்டிச செய்யும் போரிடத்தே புணபட்டு இறந்தான். இறந்த லும இடமகன்ற ஆகாயத்தை விளக்கும் ஞாயிற் றின விளங்கும கதிர் அவனைச சுடாமல பட்சிகள் எல்லாம சிறகாற் கோலி நிழல செய்து சத்தமிடு வதை நான பார்க்கமாட்டேன் என்று இரண களத்தே செல்லான கோபம மிகுந்த செயலுடைய நன்னன். நன்னன் இவ்வாறு உதவிசெய்யாது மறைதலும, பெரும் கலக்கமடைந்த வேண்மகளிர் பலரதும் பலநிறப் பூக்களாற் கட்டிய பசிய பூமாலை யைப் போக்கிய போரின் வசை ஒழியும்படி, பெரிய தாளையயுடைய அகுதை உதவி அளித்து ஞிமிலியை வென்றான். இதுபோல, நீயின் பல பழங்களுடைய பலாவின் பயன்பொருந்திய கொல்லிமலையிற காந் காத்து மலர்போல மணக்கும் அழகிய ஒடுங்கிய நெறியுடைய மயக்கந் தருபவள், பெரிய மழைக்கு உப்புப் பாத்தியில் நில்லாத வெள்ளம்போல,

நாணம் கட்டுக்கு நில்லாமற் காமம் எய்தி யாம மாகிய இரவில் எனக்கு அருள் செய்தாள்.

—பரணர்.

## 209 பாலை

இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது :

தோள்களின் பழைய அழகும் தொலைந்தன. அதைக்கண்ட அன்னை தினமும் அரிய துன்பம் கொண்டாள். ஊரில் எழும அலரோ, பொன்னா லலங்கரிக்கப்பட நீண்ட தேருடைய பாண்டியர் தலைவனும், தூண்போன்ற வலிய தோளுடைய வனுமாகிய செழியன், பகைத்த ஏழு அரசரை, தன் அடிப்படுத்தும்படி வென்ற ஆலங்கானப் போர் ஆரவாரத்திலும் பார்க்கப் பெரிதா யிருந்தது. தோழி! இவ்வாறெல்லாம் கூறி வருந்தா திருப்பா யாக.

அவர், பெரிய யானையும், வீரப்போரையும் உடைய புல்லியின் மூங்கிலுடைய உயர்ந்த மலை யாகிய வேங்கடத்துக்கு அப்பால் பாறைகளைக் கடந்து சென்றார். அவ்வாறு சென்றாராயினும், முள்ளூருக்கு அரசனும் சிவந்த வேலும் வீரக்கழலு முடைய காரி, பரந்த நல்ல புகழை நாட்டிய வலிய வில்லையுடைய ஓரியைக் கொன்று சேரலர்க்குக் கொடுத்த சிவந்த வேற் பழுக்கும் பலாக்களை யுடைய பயன் மிகுந்த கொல்லிய மலையிடத்து நிலை பெற்ற கடவுள் செய்த பலராலும் புகழப்படும் பாவை

போன்ற உனது அழகைத் தனது நிறை அழியும்படி நினையாதிருத்தல் அரிது. —கல்லாடனார்.

## 210 நெய்தல்

**இது, தோழி தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது:**

கொலையை விரும்பும் பரதவர் குறுகிய இறப்புடைய குடில்களில் வசிப்பர். அவர்களின் தூண்டிலைத் திமிறி வருந்திய பெரிய மீனின் புண்ணினின்றும் கொப்பளித்த இரத்தம புலால் நாறும கடலை மறுப்படுத்தும். அம்மீன் வானவில்லைப் போலச் சென்று பசிய துவலையுடைய திரை வீசுகின்ற கடலைக் கலக்கி வலிகெட்டு, நிரையாகக் கிடக்கும் கட்டுமரங்களின் பக்கத்தே கிடக்கும். இவ்வகையான நாட்டையுடையவன் இரவின் நடுச் சாமத்தே எமது பெரிய தோள்களை நினைத்து இவ்விடம் வந்தான, வந்தபோது நம்முடைய சோலையிடத்தே எமது அழகைப் பெரிதும் கொண்டாடிப் பெரிதும புகழ்ந்து சென்றான். இப்பொழுது அழகிய மார்பிடத்தே கொள்ளும துயிலைப்போக்கி தாழையின் பெரிய கிளைகள் வேகமுள்ள தேரைத் தடுத்தலின செல்லுதல் அரிது என்று அவர் சொல்வார் என்று பலவற்றைக கேட்டேம் தோழீ!

—உலோச்சனார்.

## 211 பாலை

**இது, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளை வேறுபாடு கண்டு தோழி சொல்லியது:**

அடி தோழி! கேட்பாயாக. வெள்ளிய சாந்தைப் பரப்பினாற் போலப் பல பூக்களையுடைய ஆச்சாமரத்தில், பறைக்கண் போன்ற பெரிய வலிய அடியும், வயிரிய கோடுமுடைய வீரமுடைய யானை சொறி தேய்க்குந்தோறும், பூக்கள் ஆலங்கட்டி மழைபோலச் சொரிந்து உழவர் வெண்ணெல் விதைத்த பாறைமீது கிடந்து காயும். இவ்வகையான குளிர்ந்த சோலைகளையுடைய வேங்கடமலைக்கு அப்பால் வேறுமொழி வழங்கும் தேயத்தே உன் காதலர் நாம் அழும்படியாகப் பிரிந்து சென்றார்.

கடிய சினத்தையுடைய அரசனின் ஏவலுக்குக் கீழ்ப்படிந்து சென்று மிக்க தூரமாகிய தேயத்தே முதற்கொடிப் படையிடத்தில இறந்த கல்லாத எழினியின் பல்லை உடைத்து அழுத்திய வலிய பூண் கதவையுடைய வெள்ளிய அழகிய வாயிலையுடைய மத்தி நாட்டிய கல்லையுடைய குளிர்ந்த துறையிடத்தே நீரொலித்தாற் போன்ற பெரிய அலர் குழியிடத்தே பிடித்த கன்றையுடைய பெண்யானையின் கூட்டம் இடும் ஆரவாரத்தைப்போல் எய்தா திருக்க அருள் செய்வார். —மாமூலனார்.

## 212 நம்பூ

இது, அல்ல குறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன் னெஞ்சிற் கெருங்கிச் சொல்லியது:

குறைவில்லாத நல்ல பொன்னாற் செய்யப்பட்ட பாவையை வானத்தில் தவழ்கின்ற இள

வெய்யிலில் வைத்தாற் போன்ற அழகும், ஐந்து வகையாகக் கூட்டி முடிந்த ஐம்பாலும், கிளையுடைய நாணற்புல் மணலுக்குள் வீழ்த்திய கிழங்கின் முள் போன்ற கூரிய பல்லுடைய சிவந்த வாயும், பாணன் தடவி வாசிக்கும் யாழிற் பிறந்த செவ்வழி போன்ற இனிய வார்த்தையும் உடைய தெய்வப் பெண்போன்றவளை விரும்பிப் பெரிய யானைக்கூட்டம் நீந்தும நீர்போற் கலங்கினேன்; கலங்கிய போதெல்லாம் அவள் கிடைத்தற்கரிய பெருமையுடையவள் என்று கூறுதலையாய்த் தினமும் துன்பந்தரும் அரிய சுரத்தைக் கடந்து என்னை வருத்தினாய். மின்னலுக்கு இருப்பிடமான பரந்த முகிலைப் போன்ற யானைப் போல வலிமை பெற்று வேறு வேறு மொழிகள் கலந்து வழங்கும் நாடுடைய விரும்பியவாறு வெற்றிகொண்டு படையாகிய நிலா விளங்கும் கடல்போன்ற படையுடைய, தேன் அரும்புகின்ற பூமாலை அணிந்த வீரப்போர் உடைய வன் கட்டி[illegible]. அவன் எதிர்த்துப் போர் செய்யும் பகையைப் பெருத்து போர் செய்யும் சினம் உடையை[illegible] போர் செய்யும் வலிமையோடு கடலை அடைந்து உயர்ந்த திரையுடைய கடலின் படிமபடி வேல் எறிந்து ஓட்டினன். அவன் பெரிய வேலைக் கடலின் நடுவே எறியக் கடல் வலி யழிந்தது போல, நெஞ்சே! கிடைத்தற்கு எளியள் அல்லளாகிய அவளைக் கருதி பெரிதும் வருத்தும் துன்பத்தைப் பெரிதும் தந்தாய்.

—பரணர்.

## 213 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது:**

*போர் வல்ல யானையும் விற்போரில் திறமையுமுடைய தொண்டையரது யானைக் கூட்டங்கள் தவழும் ஏறுதற்கரிய உயர்ந்த சிகரங்களையும் வெள்ளிய அருவியையுமுடையது வேங்கடம். அதற்கு அப்பால் கொய்த தழையுடைய புனலியின் விடியற் காலத்து மலர்ந்த பூவை, வெள்ளிய திணத்தை உணவாகக் கொள்ளும் வடுகர் கருண்ட கரிய கூந்தலிடத்தில் வண்டுகள் மொய்க்கும்படி சூடுவர்; சூடி, போர்முனையிடத்து நின்றும ஏறுகளுடைய பெரிய பசுக்கூட்டத்தை மீட்டுக்கொண்டு வருவர்; பின்பு தேறல் சமைத்து முற்றி விளைந்த கள்ளை உண்பர். இவ்வகையான தேயத்தே, நிழலும நீரும் இல்லாத தீய்கின்ற அரிய சுரத்தை நீண்டதென்று அகன்றார். என்றும் நல்ல ஆபரணங்களை இரப்போர்க்குக் கொடுத்தலின் கவிழ்ந்ததும் கழன்று ஓடுகின்ற கங்கண மணிந்ததுமாகிய விசாலித்த கையிடத்தே வெற்றியளிக்கும வாளையுடையன் சோழன். அவனது இலங்குகின்ற காவிரியாற்றின் ஓடுகின்ற நீர் வரியாக விட்ட கருமணல்போல நெளிந்தது உனது கூந்தல். இவ்வகையான அழகோடு பொருந்தியிருத்தலை மறந்திருக்கமாட்டார். ஞாயிறு பட்டுக் கதிர் ஒடுங்கிய மாலைக்காலத்தில் பெரிய மரங்களை முறித்த காற்*

ப் புகுகின்ற பெரிய புனத்தே, நெருப்பை ஒத்த கதிர் விடுகின்ற மணி விளங்குகின்ற வெல்லும் போரையுடைய யானையானது கொல்லிமலைக் குடவரையிடத்து வளர்ந்த மூங்கில் ஒழுங்குபோன்ற சரிந்த இறைகளையுடைய பெரிய தோள்களின் பெரிய அழகு சிதைப்பட்டு [illegible] அறிந்தோடு அவர் பெற்றும், [illegible] நீடித்து நிற்கமாட்டார்.

—தாயங் கண்ணனார்.

௨௧௪-வது

[illegible], பாசறையில் [illegible] தான் தன் நெஞ்சிற்குச் சொல்லியது:

அகன்ற பெரிய ஆகாயம் மறையும்படி பரந்து [illegible] பல கிரணங்களையும் மறைத்த [illegible], [illegible] துளியர் அடையும்படி [illegible] பெரிய மழையைப் பெய்தது. அரசனுடைய பெரும் பகைமையை மாறுபட்டு உயர்ந்த இலைபோன்ற வெள்ளிய [illegible] ஒளிவிடுகின்ற பாசறையிடத்து வெற்றியால் உண்டாகும் புகழைப் பெறும் உள்ளத்தோடு துயில் கொள்ளாயினன். பாசறையில் தங்கியிருக்கும் யாமும் அவ்வியல்பினேம். பெரிய எருத்தின் கழுத்திற் கட்டிய பிளந்த வாயும் தெளிந்த ஓசையுமுடைய மணியோசை ஆக்களை வீட்டுக்கு ஓட்டிச் செல்லும் கோவலரது குழலோசையோடு கலந்து, (தனித்திருப்பவர்க்கு வருத்தஞ் செய்யும் மாலையிடத்திற் பிறக்கும் செவ வழிப் பணைபோலக் கேட்டு, அரிய உயிரை உண

செல்லுதல், மாட்சிமைப்பட்ட உம்மிடத்து "நீர் நினைத்த கருமம் விரைவில் அனுகூலமாவதாக" என்றல் நன்றல்ல.

—இறங்கு குடிக்கின்ற நாடன்.

## 216 மருதம்

**இது, தலைமகட்குப் பாங்காயினர் கேட்பத் தனக்குப் பாஙகாயினர்க்குப் பரத்தை சொல்லியது :**

தூண்டிற் கோலினால் மீன் பிடிக்கும் பாண் மகள் தான் குளககரையில் பிடித்த வரால் மீனை பன்னாடையில் வடித்த கள்ளை உண்டிருந்த தந் தைககு வஞ்சி விறகிற் சுட்டு உண்ணக கொடுப் பாள். இவ்வகையான நல்ல நீராடுந் துறையை யுடைய ஊரனது மனைவி எம்மை விரும்பத் தகாத வாறு மொழிவாள் என்று கூறுவர். அவ்வாறு பழி கூறக் கேட்டனமாயின் இப்பொழுது என்ன வருத்த மடைவேம். கடலாடு மகளிர் கொய்த ஞாழலையும் வயல் உழவர் பறித்த குவளையையும் காவற் காட்டிடத்துப் பூத்த முல்லையொடு இளைய கோசர் கண்ணியாகச் சூடுவர். இவ்வகையான வளம் பொருந்திய புது வருவாயினையுடைய செல்வி நகருக்குத் தலைவனும், எறியத் தொலையாத பூண் பெரிய இறுக்கிய வெள்ளிய வேலையுடையவனுமா கிய, ஆதன், மார்பில் எழினியின் அழுத்தியதுபோல் வருந்துவார். மாதே! யான் அவரது சேரியிடத்திற் செல்வேனாயின். —ஐயூர் முடவனார்.

## 217 பாலை

**இது, பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது**

*பெய்தலின்றலை வறந்த போகிய வெள்ளை முகில்கள், சுகிர்ந்த பஞ்சின் பிளவுபட்ட நுனிபோன்ற தூறலைத் தூவிச் செல்லும். அப்போது அகன்ற வயல்களின் நிறைந்தும் மூங்கில்போன்ற நீண்ட கரும்பின் திரண்ட காம்புடைய வெள்ளைப்பூ, கோடை காலத்துப் பூளையைப்போல வாடைக் காற்றுக்கு அசையும். பசிய இலை நெருங்கிய புதர்கள்தோறும் நிற்கும் பகன்றை நீலநிற உறை இட்டுப் போர்த்த பாண்டில் விளக்கின் உறையை நீக்கினதுபோல வெள்ளிதாக மலரும். கொழுத்த இலையுடைய அவரையின் கொழுவிய முகை அவிழ முதிர்ந்த தோன்றியின் பூமுறுக்கவிழும். இடங்கள்தோறும் பட்சிக்கூட்டங்கள் கலலென்று ஒலிக்கும். இவ்வாறு அகன்ற துறையிடத்தே மகளிர் ஆபரணங்களை வெறுத்து வருந்தும்படி முன் பனிக்காலம் வந்தது. அருளாத காதலர் நலனை உண்டு விட்ட அழகழிந்த மேனியை நோக்கி நோய் தின்ன, பூங்கொத்துகள், அறும்படி அசையும் நெஞ்சோடு புணர்ச்சியை விரும்பி, பற்கள் தீப் பிறக்கும்படி திருக்கிக் கடும் பனிக்கு நொந்து வருந்துவேன், அவர் விட்டுப் பிரிவாராயின். ஆதலின் தோழி! இருக்கும் பொருள் போதும் என்று அடங்கி, எவ்வகையான பொருள் பெறுவதாயினும் பிரியேல் என்று நீ அவரிடம் சொல்லுவாயாக.*

—**கழார்க்கீரன் எயிற்றியார்.**

வாளன்றோ? எனது நெஞ்சு வருந்துகின்றது.

—கயமனார்

## 220 நெய்தல்

இது இரவுக் குறி வந்து நீங்குந் தலைமகனை எதிர்ப் பட்டுத் தோழி சொல்லியது

அணையாத தீயுடைய ஒளி விளங்கும் செல்லூரிடத்தே ஆணையானைக் கூட்டத்தின் போர் கெடும்படி, அரச வம்சங்களை வேரறுத்த மழுப்படையையுடைய பரசுராமன் முன்னாளில் அரிதின் முடித்த வேள்வி மண்டபத்து கயிற்றை அரையிலே கட்டிய மிக்க அழகும் அரிய காவலுமுடைய நெடுந்தூண் (யூபம்) போல யாவராலும் காணுதற்கரிய மிகுந்த எழுச்சியுடைய தலைவியின் ஆகத்தை விரும்புந்தோறும் குளிரும் நெஞ்சுடையையாய், ஊரிலும் சேரியிலும் ஒருமிக்க அலரெழும்படி தேரோடு வந்தும் பணிந்த மொழிகளைக் கூறியும் நிற்கின்றாய். நீ நீண்டு புறத்தே நிற்பவனாய் வருந்தினாயாயின், முழங்குகின்ற கடற்றிரை காலையில் ஒலிக்கும் மிகுந்த பழம் நெலலுடைய ஊணூரிடத்துத் தங்காத காகம்போல மனம் விரும்பிய காதன் மாறாத புணர்ச்சியைப் பெறாயாவை.

கரிய கழியிடத்து நீரைத் துழாவிய, சிவந்த தடிகள் கட்டப்பட்ட வலை, வளைந்த முதுகுடைய இறாலோடு பல கூட்டமாகிய மீன்களை வாரும். இவ்வகையான, பெரிய விளங்குகின்ற வயல்களுடைய கோரைக் காட்டிலுள்ள புதுவருவாயுடைய மருத நிலம் என்று சொல்லத்தக்க கடற்கரைச் சோலையிடத்தே, தோழியர் அலங்கரித்த சாயந்த இறையையுடைய பணைத்த

தோள்கள், அழகு அழியாத உபாயத்தை யானறியு மாறு சொல்லுவாய். (நீ புறத்தே நிறபையாயின் அவளைச் சேர்தல் கைகூடாது. அதனால் அவள் அழகழிவாள் அழகழியாமல் அவள் இருப்பதற்குஉபாயங் கூறுவாய என்றவாறு) —மதுரை மருதனிள நாகனார்

## 221 பாலை

இது, தலைமகற்குப் போக்குடன்பட்ட தோழி தலைமகட்குப் போக்குடன்படச் சொல்லியது.

நம் சுற்றத்தார் தேனில் விளைந்த இனிய மதுவை உண்டு தொழில் மாட்சிமைப்பட்ட நல்ல வீட்டில், கொண்டுவந்த மணலைக் குவித்துப், பொலிந்த கூந்தலுடைய எம் மகளின் மணம் வருகின்றதெனக் கொண்டாடினர். அதனால் புதிதாக அலங்காரிக்கப்பட்ட அசோகந் தளிர்போன்று வெள்ளிய வேலும் கரிய தாடியுமுடைய தலைவன உன்னைக் கொண்டு செலவதற்கு உடன்பட்டான். அவன் விளைந்த கிளைகள் மிகுந்த திரண்ட அடியுடைய ஆச்சாமரத்தின மெல்லிய பூங்கொத்துக்களைத் தளிரோடு கொண்டு வந்து உனது குளிர்ந்த உச்சியிற புனைவான. நீ அவனோடு, மூங்கில் வாடிய மழையில்லாத காட்டிடத்தில் யானையாகிய உணவு தப்புதலின், பெரிய வாயுடைய வேங்கை கோபம் மிகுதலின், கரிய பெண் யானை ஓடும் சோலையுடைய அருஞ்சுரத்தே செல்லுதற்கு உடன்பட்டேன். (சுற்றத்தவா நம்மகளுக்கு வதுவை என்று கொண்டாடுதலின அவர் உன்னைப் பிறர்க்குக் கொடுப்பாரெனப் பயந்து தலைவனுடன் நீ உடன் போதற்குச சம்மதித்தேன என்றவாறு) —கயமனார்.

## 222 குறிஞ்சி

இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

வானை முட்டுமபடி உயாநத கரிய பெரிய மலைநாட்டையுடையவன செய்த நோய்க்கு எனது மேனி ஆயத்தாரால அலங்கரிக்கப்பட்ட அழகு தொலைந்தது என்று நீ ஏன மொழிகின்றாய மேளத்தின் ஓசை நீங்காது விழாக கொண்டாடும் கழார் என்னும பெரிய துறையிடத்துள்ள விழாவில ஆடும், எலலா அழகும பொலிநத ஆட்ட ந்நதியின பெரிய திரண்ட தோள்களின் அழகை விரும்பி அவனோடு உரையாடித் தாழ்நத கரிய கூந்தலையுடைய காவிரி கவாதலில, திசையெல்லாம ஆராய்ந்து மனங கலங்கிச் சுழன்ற ஆதிமந்திக்கு அவள காதலனைக் காட்டிப் பெரிய கடலிடத்தே புகுந்து சென்ற பாடலாற் சிறந்த மருதியை ஒத்த பெரிய புகழ்பெறுதற்கு, இடிமுழக்க கத்தோடு பல நாள இரவில மழைபெய்த தணணிய வழியே நாம செலவோம் வா, தோழி!

—பரணர்.

## 223 பாலை

இது, பிரிவிடை வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

எமமை விட்டுப் பிரிய வலலவரா யிருந்தவர், எமமை மறந்தும இருப்பரோ? என்று எண்ணி வருநதாதே. தோழி! கேட்பாயாக பனறியின் வளைந்த கொம்புபோன்ற தலையுடைய பெரிய காயகள, அரும்பு முதிர்ந்த முருக்கின கிளைகளைச் சேர்ந்து இருக்கும பெரிய பாறையிடத்துக் கடிய

காற்று அடிக்கும். அப்பாறை அழலைப் பொழிகின்ற கொடிய காட்டிடத்தே யானைபோல, வியக்கும்படி தோன்றும். இவ் வகையான நிழலில்லாத ஓமை மரமும், நீரும் இல்லாத நீண்ட வழியிடத்தே சென்றார் நின் காதலர்.

முதுகிடத்தில் தொங்கும் கூந்தல், உயர்ந்த அணைபோன்ற தோளிடத்தே தவழும் துயிலியாகிய வண்டின் கூட்டத்தை ஒதுக்கச் சுருண்டு, செறிந்து ஐந்து வகையாய் முடிக்கப்பட்டிருக்கும். அதன் கருமை முழுவதையும் வாரித் துயரம் நீங்க நல்ல முகையுடைய புன்னையின் பூவொடு நெய்தலின் குளிர்ந்த வாசப் பூவுள்ள மாலை சூடப்பட்டிருக்கும். இவ்வாறான உனது அலங்காரப் பூவுள்ள கூந்தலிடத்துப் பொருந்திய துயிலை மறந்து அவர் உறங்குவது எப்படி.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

## 224 முல்லை

**இது வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.**

பாகனே இன்று பகற்பொழுதிலேயே தேரைச் செலுத்திச் செல்வாயாக. வளைந்த நுகத்திற் பூட்டிய தலையும் காற்றுப்போன்ற வேகமுமுடைய குதிரை, பாகன் பிடிகயிற்றைப் பிடிக்கக் கொல்லன் விசைத்து ஊதும் துருத்திபோல மூச்செறிந்து, பால் கடையும் போது எழுந்து மிதக்கும் நுரைபோன்று வெள்ளிய நுரை வழிந்து வாயிடத்தே சுருங்கிக் கிடந்து சிலம்பி நூலைப்போல காய்ந்து குதிரையின் மார்பிடத்தே

விழுந்து, சாந்து பூசிக் காய்ந்த மார்புபோலத் தோன்றும்.

புதிய அழகு பெற்று வெப்பம் நீங்கிய முல்லை நிலக் காட்டில் தெற்றி நடக்கின்ற மரைக் கூட்டம் ஓடும்படி, மனையிடத்துள்ளவள் சோற்றுப் பசையை ஐதாகப் பூசி முறுக்கித் திரித்த நரம்பின் குரலிசையை யுடையதாய், வரியுடைய மணலை அசைகின்ற ஒளி யுடைய சில்லு வெட்டும்படியாக வருவார், எனது இனிய உயிர்போன்ற தோழி! என்று அவள் பாங்கி கூறுவாள். அப்பொழுது அவள் சிலவாகிய அழகிய வளைகளை ஒடுங்கத்தள்ளிப் பல முறையும் பல காவலுடைய பெரிய மனையைப் பார்த்து வருந்தி யிருப்பள். திருந்திய ஆபரண மணிந்த அவள் இரங்கத் தக்கவளாவாள.

—ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருஞ் சாத்தனார்.

## 255 பாலை

**இது பிரியக் கருதிய தலைவன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

நெஞ்சே! அன்பும் இளமையும் அழகும் இனிய தன்மைகளும் என்பை இளகச் செய்யும் வார்த்தை களும் பிறவும் ஒன்றுபட்ட கொள்கையோடு இடைவிடாது இவளைத் தழுவி இன்று இவ்வண்ண மாயிருக்கின்றோம். நாளை உயர்ந்த புதர்களில் உயர்ந்து ஆடுகின்ற மூங்கிலிடத்துத் துயபி துவாரமிட்ட மெல்லிய துளையிடத்தே காற்று அடித்தலின், நீர் குடித்தற்குச் செல்கின்ற பசுக்கூட்டங்களுக்குப் பின்னே நீண்ட கோலையுடைய இடையர் ஊதும் புல்லாங்குழலின் ஓசைபோல, மெல்லிதாக வந்து

ஒலிக்கும் தேக்க மரச் சோலைகளுடைய காட்டிடத்தே செல்வேம். அவ்வரிய வழியிடத்தே, தூக்கிய அம் பறுத்த தூணியின் தலையைத் திறந்து விட்டதுபோல இலைகளுள் கூட்டமாகக் குவிந்து கிடக்கும் பூக்களை, இருப்பை பூத்திருக்கும். அவை சிலம்புக்குத்த துளைத் துக் கோத்த முத்துக்களைப்போலச் செம்பாட்டு நிலத் தே உதிரும் மழை பெய்தலில்லாத இவ்விடத்தே அழ கிய குடிகளையுடைய சிறிய ஊரிடத்துத் தங்குவேம். அப்பொழுது பூச்சூடிய மேகம்போன்று தழைத்து நீண்டு கறுத்த கூந்தலும், நெருங்கிய வளையுமுடைய காதலியின் துன்பமாகிய பார்வையையும் புலவியை யும் நீங்கப்பேம். —எயினந்தை மகனார் இளங்கீரனார்.

## 226 மருதம்

இது, தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.

புது வருவாயினையுடைய ஊரனே! யான் அறியாதவள் என்று நினைத்து உனது மாயஞ் செய் யும் பெரிய நாணத்தக்க நிலையைக் கூறுகின்றாய்.

ஊரிடத்தே நீரில் அலைகின்ற தழைகளைச் செய் யும் குறுகிய வளையணிந்த பெண்களைக் கண்டு மருத நிலத்தே பஞ்சாயக்கோரை கூட்டமாக வளரும் கரந்தைச் செடியுடைய வயலிடத்துள்ள கொக்கு கள் பறக்கும் இவ்வகையான வயல்களை உடைய வன்; வலிய வில்லும், தூண்போன்ற தோளுமுடைய வனும், பரதவர் தலைவனுமாகிய பல வேறுபடையை யுடைய மத்திநன்னனார். அவனது முன் துறையிடத்தே உயர்ந்த வெள்ளிய மருதோடு வஞ்சி மரம் சாயும்படி விடியற்காலையில் காவிரி யாற்றின் புனல் விசையோடு

பாயும். அக்காவிரியின் புதுப்புனலை வளையணிந்த பரதத்தையோடு சேர்ந்து ஆடிய கள்வை இன்று, வலிமை மிகுந்த பாணரோடு மிகுந்த தார்ப்படையை யுடைய தித்தன் வெளியன் பொருத வந்தபோது காலை உலகத்திற் பாடிச் செறிந்த கிணைப்பறையோடு பாணர் பாடிய பாடலைக் கேட்டு, பொருதவந்த படையை இடந்துகொண்டு பொருதார்தோடிய ஆர்ப்பினும் பெரிதாகும். (களவை நித்தன் வெளியன் பாணரோடு பொருதார்தோடிய ஆர்ப்பினும் பெரிது என்று சேர்த்துக்கொள்க.) —பரணர்.

[illegible] பாலை

இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது

"நெற்றி பசலை நிறங்கொண்டது; தோள்கள் வாடின; பொறியுடைய அல்குலின் வரிகளும் வாடின. இவள் எவ்வகையான துயரை அடைவாளோ?" என்று பல மாட்சிமைப்பட்ட நீர் நிறைந்த கண்களோடு நீள நினைந்து ஆழ்ந்து வருந்தாதி. தோழி! கேட்பாயாக; பெரிய வலியுடைய ஆண் யானை காய்கின்ற சினமுடையதாய வாயிடத்தே வழிந்து செல்லும் மத நீருடையதாய முலைனே நிற்கின்ற வேங்கை மரத்தைப் பார்த்துக் கோபித்துப், பொன் போன்ற நிறமுடைய வேங்கையின் பூவுடைய கொம்பு வருந்தும்படி அதனைப் பாயும். பின்பு செம்பாட்டு நிலம் சேறுகும்படி அதைக் குத்திப் போர் செய்து போர்க்களத்தே போர் கொள்ளும் வீரரைப் போல முழங்கும். இவ்வகைச் சுரவழியைக் கடந்து சென்றாராயினும், நங்காதலர், நிலைபெற்றுத் துன்பமில்

லாதவராகுக. **தழும்பன்** வாள் முனையில தமிழ் நாட்டை அகபபடுததினன. அவன், ஒலிககின்ற முரசினைக கொட்டி வருவோரை அளவிட முடியாத ஒலகக விருககையிடததே, தூஙகல் எனனும பண் பாடப்பட்ட நலல இசையையுடையன; பிடி மிதிதத வழுதுணஙகாயபோன்ற தழுமபையுடையன; காவலையுடைய மதிலையுடையது அவனது ஊனூர். அதற்கு அப்பால் பெரிய [illegible] உறைகின்ற மேலானோர் [illegible], கரிய [illegible] [illegible] சோலை யுடையதுமான [illegible] [illegible] அந் நகரின ஒலி [illegible] [illegible] [illegible] போன்று கலலெனனும ஆரவாரம செயது அவர் [illegible].

(வருகைக்கே தோழி ஆரவாரஞ் செயது அருஞ் சுரம பல கடந்து சென்றவர் துனபமிலலாதவராகுக என்று சேர்த்துக் கொள்க.) —நக்கீரர்.

## ௨௨௮ குறிஞ்சி

**இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.**

வண்டின் பல கூட்டஙகள் ஆரவாரிக்கக கல, எனனும் ஓசையுடன மலையினின்றும குதிக்கும அருவி, சநதன மரததை அலைந்து தனனொடு கொணர்ந்த மலைசசாரலிடததே ஓடும அச சாரலிற சுனை யிடததே பெரிய இதழுடைய குவளை, கணபோல மலாநதிருககும கரு முகைகளை யுடைய நீண்ட சுனையிடதது நமமோடு ஆடிய பகறபொழுதை (நம மோடு) கழித்து, இரவே காதலர் செலவார. அவ்வாறு செலவாராயினும அது நனமையாகாது. வானத்திற்

பரந்த பகல்போன்ற நிலவில், கரும்பு சூழ்ந்த சார லிடத்து, ஒடுங்கிய வழி செல்லும் உயர்ந்த இடத் துள்ள வேங்கையின் விளங்கும் பூ, புலியின் புள்ளி போலத் தோன்றிப் பெரிய பெண் யானையை ஓடச் செய்யும். அவன் இவ் வகையான சோலையையுடைய பெரிய மலையிடத்தே புது வருவாயினையுடைய அழகிய சிறிய குடியிடத்தவனாவான்.

—அண்டர் மகன் குறுவழுதியார்.

## 229 பாலை

**இது, தலைமகன் பிரிவின் கண் வேறுபட்ட தலைமகளை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிரழிந்து சொல்லியது.**

ஒளி செய்கின்ற பல கதிரையுடைய சூரியனது அகன்ற வானத்திற் செல்லும் சக்கரம் பிளந்ததுபோல, நீண்ட வழியிடம் வெடித்து நீரில்லாமல் வறண்டது. சிறிய தலையுடைய கன்றையும், கவிந்த நகத்தையு முடைய இளைய பெண் யானைகள், தழை உணவு தின் னாமையால் வாடிய பக்கமுடையனவாய் பாழடைந்த ஊரிடத்திலுள்ள சிறு குடில்களைப்போலத் தோன்றும். இவ் வகையான பெரும தூரத்தே உள்ள மலையைக் கடந்து சென்ற பொய் கூறுவதில் வல்லவர், முயன்று ஈட்டிய பெரிய பொருள், நாம் அவரிடத்து இல்லை யாயினும் விரைவில் முடிவதாக தோழி! பெரிய வருத்தம் உண்டாதலின் துன்புற்ற சிறுமியே! நோய் மிகுதியால் சொரிந்த வாடிய கண்ணீர் பூவிதழ் போன்ற கண்ணின் பார்வையை மறைக்கவும், பொன்னை ஒத்த பசலை, மேனியிற் படரவும், பொறி

யும் வரியுமுடைய நல்ல மாமை நிறமுடைய மேனி யின் அழகு தொலைந்தலைப் பார்த்து வருந்தாதி, என்றாய.

இலைகளின் பசிய அரும்பையின்ற சிவந்த முகை யுடைய முருக்கின் முகையின் அவிழ்ந்த மலரைக் கோதித் தாதை அருந்தும், அழகிய தளிரையுடைய மாவில் இலையின்மீது இருக்கும் சிவந்த கண்ணுடைய கரிய குயில், இனிமையாகக் கூவும். இவ்வினிய இள வேனிற் காலமாகிய, இப் பருவத்தில் வருவேனென்று என்னைத் தெளிவித்துச் சென்றவர் வாரார்.

—மதுரைக்கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார்.

## 230 நெய்தல்

இது, தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

கழி பொருந்திய கரையில் திரை வீசுதலின் மலர்ந்த சிறிய நெய்தலின் கண்போன்ற கரிய மலரும், குளிர்ந்த மாந்தழையும் அணிந்த அல்குலும், ஐதாக அரும்பிய அழகு தேமலும், கூரிய பல்லும், கரிய தெய்யுடைய கூந்தலும், ஒளிரிய நெற்றியுமுடையள் அச் சிறுமி. அவள், விளையாட்டுத் தோழியருடன் வெண்மணலிலுதிர்த்த புன்னை மலரின் நுண்ணிய தாது, மனையிடத்தே விளங்கும். யாம், வேகமாகச் செல்லும் குதிரை பூட்டியதும், கொடிஞ்சி யுடையதுமான உயர்ந்த தேரைக் கைதேர்ந்த பாகன் பையச் செலுத்த, அவளைக் குறுகினேம். குறுகி இம் மனையிடத்தே என்னைப் பாதுகாப்பாயாகில் இம்மனை யின் உரிமை முழுவதும் எனக்காகும். எம்மைப்

புணரில தீமையுணடோ எனறு சொன்னேன். அவள் உயாநத அழகிய செவ்வரிபரந்த கணகளிடத்தில கண்ணிர் வருதலை அடககிககொணடு, யான் பெரிதும் துயருறுமபடி தலையைச சிறிது கவிழ்ததாள.

—மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

## 231 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது**

பகைததவரது செருககை வாடடலும, தமமைச் சோர்ந்தோர்ககு வறுமை உறறவிடத்து மகிழுமபடி உதவி செயது ஆணமை செயதலும, இலலிடததே அடஙகியிருபபோர்ககு இலலை, எனறு காதலர் எணணி நலல புகழைபபெற ஈாக்கும மானமுடைய மனததராயினர். பகைதது வநதவரது போரை வென்ற அழியாத புகழை யுடையவனும, வானை முடடும வெண்கொறறக குடையையும, பசுமபொன ஆபரணஙகளையும உடைய பாணடியனது பெரிய சிறப்புடையது கூடல் நகர். கூடல நகாபோனறு அழகிய உனது வணடுகள் சிறகடித்து ஆறறுகினற உசசியிடத்தே பூக்கள சூடிய கூநதலைத் தழுவிய வராவர் உன காதலர். அவா, வளைநத விலலையுடைய ஆறலைபபோரது கணைபடடு இறநதவர்களை இடடு மூடிய மயிரைமேலேயுடைய கறகுவியலகள, கள்ளிககாட்டு இடஙகளதோறும கூட்டமாகக கிடந்து நினைபபவாககும் அசசம தரும, செலலுதறகரிய காட்டிடததே சென்றார. அவ்வாறு சென்றனராயி

னும அவர் உனது நெஞசு உருகும்படி வருவார், தோழி! —மதுரை ஈழத்துப் பூதந்தேவனார்.

## 232 குறிஞ்சி

இது, தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

*தோழி கேட்பாயாக. நடுச் சாமத்தே மழை முழங்கும் ஓசையைக் கேட்ட, மூங்கிலைத் தினனும பெரிய யானை, அவ்வோசையைப் புலியின் சத்தம் என்று நினைத்து வெருண்டு கரிய பாறையிடத்துள்ள வெடிப்பு ஒலிக்கும்படி ஓடும் மலைநாட்டவனோடு உறவுடையோமாயிருந்தோம்.*

*குன்றை வேலியாகவுடைய சிறு குடியிடத்தே வீதியிடத்து நிற்கும் வேங்கைமரம் கலியாண நாளிற் பூத்த மணி நிற அரும்பிணையுடைய பொன்போன்ற பூக்கள் விழுந்து பரந்து பெரிய பாறையில் வரியுண்டாக்கும். இவ்வகையான வீட்டு முற்றத்தில் குறவர் முதிர்ந்த மகளிரோடு குரவையாடுவா அந்த ஆரவாரமுடைய விளையாடுமிடத்தை ஒப்ப அன்னை தினமும் பரந்த பூவாகிய பலி தூவி, காவலுடைய பெரிய மனையைக் காவல் காத்து, இது முருகனால் நேர்ந்த நோயென்று வேலனை மனையிடத்தே கொள்வாள். அவனது உறவு அவள் வேலனைக் கொண்டு வரும் பருவமாக எமக்கு வந்தது.*

—கொடி மங்கலத்துவாதுளி நற்சேந்தனார்.

## 233 பாலை

இது, பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது

குளிர்ச்சியுடைய கணகள கணணீர் நிறைந்து வழிநது பரந்த முலேகள நனேயுமபடி வருந்தி அழா திருப்பாயாக. தோழீ' நெருபபுக கவாநது உணட கரி புறததே உடைய பெரிய நிலத்தின கரிய பககங களில மழை பெய்யாதாகும. அதனுல் உணவு பெருத யானே, வேனிற காலததே வாடி நிறகும். மேலுலக மடைநத குறையாத நலல புகழையுடைய முன்னேரை ஓம்பிய வீரமுடைய குதிரைப் படையும, குனருத வலிமையுமுடைய உதியஞ் சேரல் (அம முதியவர் பொருட்டுப்) பெருஞ் சோறு கொடுத்தபோது கரிய பல கூளிசசுறறம கூடியிருநதன. அவை போனறு குறிய வும நெடியவுமாகிய குனறுகளேயுடையதும (யானே வேனிலுககு வாடி நிறபதுமாகிய) சுரவழியைக காதலா கடந்தனா. அவா பிரிநதனராயினும நின இருணட ஐவகையாய முடிந்த கூந்தலிடதது இனிய துயிலே மறநது மிகவும அடஙகாத உள்ளததோடு மனதை மயககாத பொருள தொகுபபதில நீடததா மதிகக மாட்டாா. —மாமூலனர்.

## 234 முல்லே

இது, தலேவன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

கார்கால மழை பெய்து நீர் விளஙகும நுணணிய மணல் பரந்த குளிர்ந்த நீர்நிலே குளிர்ச்சியடைந்திருக் கும். அதன பக்கததே, விரைவாகப் பறககும சிற குடைய அன்னத்தைபபோல விரைவாகச செலலும், சிறிய பிடரிமயிருடைய செருககிய குதிரையில் மாட்டிய கடிவாளத்தை ஒருமிக்க இழுத்துப் பிடித்து, நிலத்தில் புதைந்த விளங்குகினற சிலலு மென்மை

யான வழியை வெட்டக காற்றெனலும்படி செலல, நல்ல சாரதித்தொழிலில் தோந்தவனே! நூலிற் சொன்ன முறைமைப்படி பணணப்பட உயாந்த தேரை ஏறி மிக விரைவாகச செலுத்துவாயாக வழியிடத்தே தழைய எதிர்பபடுத் தெறிதது நடக்கும இளம பெண் மான மாலைறறைத தழுவும் விருப்புடையதாய இடையூறின்றித் துளளிப பாயந்து செலலும அழகிய சிறகுடைய பறை போல ஓசை செயயும வணடுக்கூட்டம். வாசமுடைய முலலை மலரின தாதை விருமபி ஊதும். பொழுது சாய்ந்த புலலெனறிருக்கும் மாலைக் காலததில முலலை நிலக்காட்டில இருநத உறைதறகு நல்ல ஊரிடத்தே, மிகக துயரால வருநதி நீா வடியும் கணணிடத்தே பசலை நிறம பரநதவளாய், மினனலபோனற கூந்தலுடையவள, இருபபாள அவளுடைய கூந்தலின் பினனல குலையுமபடி (அவளை யானடையுமாறு பாகனே தேரை மிக விரைவாகச செலுத்துவாயாக)

—பேயனார்.

## 235 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றுமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.**

தோழி கேட்பாயாக. காதலர் பொருளீட்டுத வினை நம்மை நினைகக மாட்டாரோ? நினைத்தும் பொருளீட்டுதலாகிய சிறந்த செயலினுல எமமை மறந்தாரோ? பயன்றரும நிலம் குழையும்படி மழை பெய்யும்; பெய்து, பெய்தலை ஒழிந்து வானிடத்தே கரிய மேகங்கள் செலலும். அவை பொழுது படும் சமயத்தில் எழுநது துளிகளைப் பெயயும. இத்துளிக்

கும் வாடைக் காற்றுக்கும் வளர்ந்த, வாயிடத்தே இதழையுடைய தோன்றி, சுடர் எரிகின்ற விளக்குப் போல சுருங்கிய முறுக்கை அவிழ்க்கும். சரிந்த முகையையுடைய முசுண்டையின் முறுக்கவிழ்ந்த அழகிய பூ ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைப்போலப் பசிய புதர்களை அழகு செய்யும். நண்டு மண்ணிட்டுத் துள்ள புற்றிலே செல்லும்; பெரிய வயலிடத்தே விரிந்த மட்டங்களையுடைய கரும்பின் திரண்ட காம்புடைய அழகிய பூ மழைக்காலக் கொக்குப்போல வளையும், மிக்க கடிய கோபத்தோடு அச்சம் உண்டாக்கிக் குளிர்ச்சியை மிகவும் கொண்டதாயிருக்கும் கொடிய வாடைக்காற்று. அது மயக்கத்தைத் தருகின்ற மாலைக்காலத்தோடு அருளில்லாது என்னை வருத்தும். இவ்வாறாக இவள் நெற்றியிடத்தே கொண்ட அயலவர் அறியும் பசலையோடு தனது அழகு அழியும்படி சோர்ந்து என்ன ஆகுவள் என்று அவர் நினையாராயினர்.

இவள் என்னாகுவள் என்று நினையாதவர் என்னை நினைப்பரோ? மறந்தனரோ? என்று வினைமுடிவு செய்க.

—கழார்க்கீரனெயிற்றியார்.

## 236 மருதம்

**இது, ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் நீக்கத்தின்கண் புக்க தோழிக்குச் சொல்லியது.**

நீல மலர்போன்ற முள்ளி தெளிந்த நீருடைய மடுவில் நெருங்கி வளர்ந்திருக்கும். அம்மடுவிடத்துப் பிடித்த பெரிய மீனின (செவ்) வரிபோன்ற நிற

முடைய கொழுத்த தசையை வெண்ணெல் அரியும் களமயா ஆவலோடு உணபர். அவர்கள் செலலும வழிககுப் பினனே, வயலகளின நடுவில் நீணட கதிர் கள் நெரியுமபடி அடுககபபட்ட பல சூடுகள கிடக் கும அவறறின சரிநத பககங்களைச சுற்றிக கிடக் கும வயலகளில கரிய கொம்புகளையுடைய மாமரத தின அசைகினற கிளைகளில பூதத புதுப பூ கரிய மழைத தூவலபோல உதிாநது பரந்து கிடககும. இவ வகையான ஊரனது காமததின பெருமையை அறியாது அனறு ஒடுங்கியிருநதேன. தோழி! கேட் பாயாக. குறைவிலலாத அழகு விளங்கும் சாந்தின் வகைகள பூசி விளங்குவோரும, வளைநத காதணி அணிந்தவர்களுமாகிய பாததயருள் எவளிடததில் தன கணவனாகிய ஆட்டநந்தி இருககினறானென்று, ஆதிமந்தி அறியாளாயினாள், அறியாமையின் வருந்தி னாள்; அழகிய நடையிற சிறநத வலியும், மலா சூடிய கரிய வாசமுடைய ஆட்டநதியைக் கணடீர்களோ வென்று நாடு நாடாகவும ஊர் ஊராகவும், தேடிக் கடல கொண்டதென்றும, ஆறு ஒளித்ததென்றும் மயிா முடியுடைய காதலனை இழந்தமையால அழும் கண்ணளாயினாள். அவளைபபோலத் துயரைக் கூறிப் பெரிய துன்பம் அடைகினறேன். —பரணர்.

## 237 பாலை

இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

மெலலிய காலுடைய பாதிரி மரத்தின அழகிய நிறமுடைய திரண்ட பூவும, மெலலிய காட்டு மலலி

கைக் கொடிப் பூவும், நுணாவின் அறல்மீது வரியாகப் பரந்து கிடக்கும். பாம்பின் பல்போன்று அரும்பு முதிர்ந்த குராமரத்தின், வண்டு ஊதுகின்ற வாசமுடைய கொம்பரைக் காற்று ஊடுருவிச் செல்லக் குயில் கூவுகின்ற துணைபுரிதோடு கழிகின்ற இளவேனிற் காலமும் வந்தது. இவ்விளவேனிற் காலத்தே நித்திரையின்றி எப்பொழுதும் இராக்காலம் கழியும். உனது அழகிய மாமை நிறமுள்ள மேனி அழகுவாட வருந்துதலோ பெரிதாயினை. அழகிய ஆபரணமணிந்த பெண். மூணெரியும் நெருப்பில் வெந்த, சிவந்த இறைச்சியை மிருதுவான தினைச்சோற்றோடு பழைய பாத்திரத்தில் இட்டு பெரிய நெற்கதிர்கள் அசைகின்ற வயலிடத்தே விளைந்த கரும்பைப் பிழிந்த இனிய சோற்றோடு பால் விட்டுச், செந்நெல்லில் இடித்த அவலையும் பகுந்து விருந்தினருக்குக் கொடுக்கும், புனல் கரையைப் பொருதுகின்ற மதில் வாயிலையுடைய உறந்தையை அடையினும், தான் சென்ற வினையைப் பொருளாகக் கருதிக் காதலர் தரியார். கடை சிவந்து அழகாக அமர்ந்த கண்ணுடைய உனது கூரிய அழகிய வெள்ளிய பற்களில் ஊறிய நீரைத் தவிர்ந்து இருக்க மாட்டார். (எயிறு ஊறிய நீரை, வினை பொருளாகத் தவிர்ந்திருக்கமாட்டார் என வினை முடிவு செய்க.)

—தாயங் கண்ணனார்.

## 238 குறிஞ்சி

இது, இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

மான்களை அறியாத மரம நெருங்கிய குறுங்காட்டில ஈன்று இளைத்ததும உணவில விருடபுடையதுமாகிய பெண புலி பசித்திருக்கும. அதறகு இளமானின் இறைசசியைக கொணடு வருவதறகு பனைபோனற கழுத்தும பலவரியுமுடைய பெரிய ஆண புலி நடுச்சாமததே கரிய முகையுடைய மலையில் இரையை விருமபி எழும. எழுந்து அழகிய கணணுடைய காட்டுப பசு திசை எலலாம கேட்குமபடி அலற பெரிய கொம்புடைய ஆமா வெருதைக காட்டின மததில் வலப பககததே விழுமபடி கொனறு கரிய கலலுகளுடைய பெரிய பாறை இரததம படிநது சிவககும்படி இழுககும். இவ் வகையான மலை நாட்டை உடையன உன தலைவன.

இரககினறவர்களுககு அலங்கரிககப்பட்ட உயர்ந்த தேரை யானையோடு எனறும மழை பெய்தது போற கொடுககும் ஈகையை உடையவனும, கொடையில் மகிழ்கினறவனும், கழலகினற வீரவளை அணிநத பெரிய கையையும், செருககிய குதிரையையுமுடையவன நள்ளி. அவனது, குளிர்ந்த பூ முகைகள் விரிந்து மேகஙகள் படிகின்ற பக்க மலையிடத்தே உளளது போந்தை. அவ்விடத்தே காநதட் கொடியின் முகையவிழ்ந்து அலாநத குளிர்ந்த மணம வீசும், புதிய நறிய மலர்கள, மணககினற, நெறறியுடைய நீ மலைநாடனைப பிரியின அந நோயககு மருந்துமுணடோ? கபிலர்.

## 239 பாலை

**இது, பொருள் வயிற் பிரிந்து போகா நின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது**

வெளிப்பட்டுத் தோனருது வில்லே ஆராயவர், புலியைபபோல உறுமுஞ் சிவந்த கணணுடைய ஆறலைப் போர். அவர்கள ஏூஙகிற கோலில இறுககிய அமபினராய எல்லூரை வென்று பல பசுக்களைக் கவருமம, சீழ்ககை ஒடு கூடிய ஆரவாரம, கொடிய சுரததே எதிரொலிககும. இவ் வகையான பல வேறு வகைபபட்ட தேசதது வழிகளைக கடநது, தொயயிற் குழமபின புள்ளிபோலப பொறியா யுள்ள அழகு தேமலுடையவர்களும, விளஙகும் ஆபரண மணிந்தவர்களுமாகிய பெணகள் வானததில உயாநத பிறையைத் தொழும்புல லெனற மாலைக காலததே நாம் அவ்விடததை விட்டு நீஙகிஞேம. அபபொழுது ஈட்டுதற்கரிய பெருமையுடைய பொருள் காரணமாகச் சென்ருல நெடுநாள தங்க மாட்டீர் அலலிரோ? என் தலைவரே! எனறு, சிறிய நீணட புலவி கூறி நமமோடு இனிய வாாத்தைகள பல கூறிய சிறிய நலல ஒருத்தியாகிய என் காதலி பெரிய நலல ஊரிடததள.

—எயினந்தை மகனிளங்கீரஞர்.

## 240 நெய்தல்

**இது, இரவுக்குறி நேர்ந்த தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது**

சிவந்த பூவுடைய ஞாழலின் கரிய கொம்பின் பெரிய கிளையிடததுத் தனித்த குஞ்சை நினைந்த தணணிய சிறகுடைய நாரை, நீல மணி போனற பூவுடைய நெயதல வளருமம கரிய கழியிடததை விட்டுப் பறநது செல்லும். அதனுல கடற்கரைச் சோலை தனிமை ஒழிந்தது. குளிர்நத கடற்

றிரையாகிய சுரத்தைக கடககும் வலிய படவின் விளக்கில பலமீன கூடடததை எனது தமையன மாருககுக காட்டிய எனது தநதை இராக்காலத்திற செலவார். அநதிககாலததேத தெயவம உறைகின்ற குளிர்ந்த துறையைக கைதொழுது வணஙகி ஆயும் தோழிமாரோடு உறஙகுவாள. நீயும தேனபாய் கின்ற கூநதலுடையவளின அழகிய நெற்றியைத் தடவி கோஙகம முகைபோன்ற குவிந்த முலையுடைய மார்பிடததே இனிய துயிலைககொளள விரும்பினையா யின வண்டுகள மொய்ககுமபடி விரிநத செருநதி மரம் நிறகும் முடுககில, பூ வேய்நததுபோன்ற பூககள் மலாநதிருககும புனனை ச சோலையில இவளை மணந்து செலவதறகு வருவாயாக.

—உழுப்பன்றி நாகன்குமரனர்.

## 241 பாலை

இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

மலையிடத்துள்ள மூஙகிலின இளைய முளை காய வும், மூஙகிலின தண்டு ஒலிககினற பெரிய காடு வெமபவும், மழையை மறநது அருவி வறண் டிருக்கும், அசசந்தரும் அகனறவிடத்தே, தாகங கொணட தனித்த முதிர்நத கலைமான், கானல் நீரை மழை என்று நினைத்து ஓடும். ஓடி அவ்விடததை விட்டு நீங்காது வாடிய தலையுடைய புதிய கொடிய காட்டிடத்தே வருநதி உறையும். அங்கு வழியிடததே நின்ற நெலலியின இனிய சுவையுடைய திரண்ட காய்கள் உருணடையாகிய கழங்குக காய்கள்போலப்

பரந்துகிடக்கும தலையிலே பஞ்சபோன்ற மயிருடைய செங்குரங்கு அவைகளை எடுத்து விளையாடும. அம்மர மருங்கிலுள்ள மலையைக் காதலா கடந்தார். தோழி! கேட்பாயாக.

“அவா வெறுப்பில்லாது கொண்ட வெருத நட்பினால இனியவர் என்று சொல்லும்படி வெறுக்காது அருள செயவாா,” என நீ நலவுறறைக் கூறினும் பிரியாத காதலோடு நமமிடத்தவரா யிருநதவர் பிரிந்தாா

— காவன் முல்லைப் பூதனார்.

## 242 குறிஞ்சி

**இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலை மகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.**

அருப்பு முதிர்ந்த வேஙகையின அசைகின்ற மெலலிய கிளையிடத்து வண்டு முறுகக விழ்தத பூவின, பொனனை ஒதத நுணணியதாது, நீலமணி போனற தோகையிடத்தில் உதிர, மயில் சோலை யிடததே ஆடும. இவ்வகையான சோலையிடத்தே பசிய தாளுடைய செந்தினை வளைந்த குரல ஈனறிருக்கும தினைபபுனம் உள்ளது. அவ்விடததே சிவநத ஆரமுடைய பசிய கிளியை நம்மோடு ஓட்டியவனது அழகு தந்ததினால வந்த நோய இதுவென அன்னை அறியாள; நுட்பமான அழகுடைய இளந்தளிரை ஒதத அழகுடைய என மகள நோயுறற காரணம் அறிய வேணடுமென விருமபினள்; ஆகவே அவள் பல குறுணி அரிசியைப பலியாகத தூவி, நோயின் காரணத்தை அறியாத வெறியாட்டாளனை மனை

யிடத்தே கொணடுவந்து, வெறியாட்டாடும் பெரிய களம் மங்கல முணடாகத தொழுது மறியின் உயிரைப் பலிகொடுப்பாள்.

ஆதலின் தோழி! தேனகூடுவைத்த குளிர்ந்த முகையுடைய மலையிடத்துப், பெரிய மலை வெடிப்பிடத்தே உயர்ந்த சிறிய இலையுடைய சந்தன மரத்தின மெலலிய கிளை தீணடி. மேலே இருககின்ற தேன் கூட்டை அசைககும் உயாநத மலையை உடையவனது மார்பை, (ஆயமறி உயிர் வழங்கமுன்) யாம் சென்று, செலலவும வரவும கழலகின்ற தூரததே விளங்குகினற வளை உடைய முனகையும, நேரிய இறையுடைய பருத்த தோளும் நல்ல அழகழியாது பழைய அழகு எயதுமாறு, அருமபிவருகின்ற இள முலைகள மார்பிடததே மறையுமபடி பல முறை முயஙகுதல இயையுமோ?

(ஆயபலிகொடுககமுன மலைநாடனது மார்பை பழைய அழகு பெறுமாறு முயஙகுதல இயையுமோ எனச சேர்ததுக கொள்க.) —பேரிசாத்தனார்.

## 243 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றேனெனபது படச் சொல்லியது.**

அவரையின அழகிய மலர்கள இரத்தம்போல் சிவந்தன வளைந்த துளையுடைய பவளமபோல இணடங கொடி பூததது. தாழபபூககளைப பூத்த குளிர்ந்த புதாகளிடததே பகனறை, சுழல்கின்ற நுணணிய நீரத்துவலை போன்ற வட்டமான இதழகளை அணிந்திருக்கும. மழை பெய்யும் நீர் புதிதாக வருதல்

னிறமையின் கருவாகிய கதிர்கள் விரிந்து வளைந்து வயலிடத்தில் விளங்கும். பசிய நெல் ஒலிக்கும் பசிய விளை நிலத்தைத் துழாவிக்கொண்டு கண்ணில்லாத வாடை விரைவாக வந்து தங்கினது. வாடையே! நீ வந்து நெடிது நிற்கின்றாய் எனத் தாங்க மாட்டாது வருந்தி பலவற்றைக் கூறிப்புலந்து உறைவர், துணை வரையில்லாத வாழ்க்கையவர் நம்மைச் சூழ்ந்த நிலைமையைக் கூறிப் பிரிந்த அவரது நிலைமையை அறிவேமாயின் நன்றாகும். அதுதான் இல்லையாயிற்று. அதனால் நாம் நீர் வடியும் கண்ணேமாக இனியதாகிய வாடை நமக்கு வருத்தமாகின்றது. இது நமது பழைய வினைப்பயனாகும்

—கொடியூர் கிழார் மகனார் நெய்தற்றத்தனார்.

## 244 முல்லை

இது, வினை முற்றிய தலைமகன், தேர்ப்பாகற்குச் சொல்லியது.

"பசையுடைய பசைசை நெய் தோயத்தாற் போன்ற பச்சை நிறமுடைய குருவி (கிளி) உயர்ந்த கிளையிடத்தே இருக்கும். அது பகற்காலத்தே உறைந்த முதிய மரம் தனிக்கும்படி விட்டுப்பறந்து செல்லும். சென்று, மொட்டு விரிந்த முல்லை மலர் கலியாணப் பெண்ணின் கூந்தல்போல நாறும் முல்லைக் கொடிமீது வண்டின் கூட்டங்கள் தங்குவதைத் தடுக்கும். இவ்வகையான குளிர்ந்த மாலைக்காலம் வந்த விடத்தும், வாராராயினும் அவ்விடத்து அவர்க்கு இனிதாயிருக்குமோ? தோழி!' என்று பல இதழுடைய மலர் போன்ற குளிர்ந்த கண்கள் சிவப்ப வருந்தும் துயருடையளானாள். இவ்வாறு சொல்லித் தூதாகப்பாணன்

வந்தனன. பாக! நீயும புலலுமேய்கினற குதிரையை மிக விரைவாகப பூட்டி நெடிய தேரை விரைவாக செலுத்துவாய நாம கருதி வநத வினைமுடிநதது.

—மதுரை — — மள்ளனார்.

## 245 பாலை

**இது, பொருள் கடை கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.**

"உயிரினுஞ் சிறந்த மேலான பொருள் கொண்டு வருதறகு நலலது புரியும அறிவினையுடையவராகிய அவர்," என வீட்டிடத்தே நினையும அறிவுடையவளாவள என காதலி. அதனை நீ அறிநதனையாயின நீ பிரிந்து செலவாயாக

மழை பெயயாமையின் வழியிடததே மூங்கில உலர்நதிருககும. அவவிடததில செலகினற வியாபாரிகளைக கொல்லும் கெட்ட வாழ்ககையுடைய வலிய விலலையுடைய இளைய ஆறலைபபோா இருபபர். அவர்களின தலைவன் விடியற காலையில வரிகள விளஙகும் பெரிய தோளகளும வயிறறிலே தேமலுமுடையகளளுவிறகும் பெணடிர் இருககும வீட்டிடத்து மகிழ்சசி கொடுக்கும கள்ளைப் பெறுனுவன, பெறுனுக, மதம் கனனத்தை நனைககினறதும மன்றிடததே நின்று தனது புதலவனின தலையைத தடவுகினறதுமாகிய காட்டு யானையின் வெணகோட்டைப பெறக கருதி போாமுனைபோனற அவ்வழிப பக்கததே மறைநதிருபபான. அவன இருககுமபடி அழகு பெறற நீணட அடியுடைய இலவ மரத்தின அசைகினற கிளைகளில தீசசுடரை நெருங்கவைத்

தாறபோனறு விளங்குகின்ற பூக்கள் பூத்திருக்கும். அப் பூக்களிடத்தே குழல் ஓசையையுடைய தும்பி ஆரவாரஞ் செய்யும். அவ்விடத்தே குறிய மலையிடத்துக் கிடந்து காய்கின்ற வெள்ளிய எழும்புகள் வயிரமான காலையுடைய ஓட்டகத்தின் பசியைப் போக்கும். இவ்வகையான கல்லுடையதும் நீண்டதும் பல கவர் வழிகளையுடையதுமாகிய நாட்டைக் கடந்து அழகிய மாமை நிறமுடைய காதலி ஒழியும்படி செல்வாயாக, யான வரமாட்டேன.

—மதுரை மருதனிளநாகனார்.

## 246 மருதம்

இது, தோழி தலைமகற்கு வாயின மறுத்தது.

கரகரப்பான உடம்பையும் பெரிய வாயையும் உடைய ஆண் சங்கு, நீண்ட மூக்குடைய ஆரல் மீன் நண்டைப்போல் திரிய, ஆழ்ந்த நீருடைய பொய்கையிடத்தே தனது துணையுடன் புணரும். இவ்வாறு நீர் மிகுந்த பெரிய வயலையும் புது வருவயினையுமுடைய ஊரானே! நீ பூவேய்ந்த கூந்தலுடைய விருப்ப மிகுந்த பரத்தையோடு, பூந்தாது நிறைந்த காஞ்சிமரச் சோலையுடைய அகன்ற ஆற்றிலே நேற்றுப் புனலாடினாய் என்று கூறுவர். அவ்வலரானது, காய்கின்ற கோபமும் வலியும் பெரிய புகழுமுடைய கரிகாற் சோழன், மிக ஒலிக்கின்ற களனுடைய **வெண்ணியின்** வாயிலில் சிறப்புப் பொருந்திய மன்னரைப் பொருதிய, முரசம் ஒலிக்கின்ற போர்க்களத்தில், பதினொரு வேளிரோடு அரசர் மடிய, அவர்களின்

திரண்ட வலியைக் கெடுத்தபோது குறைவின்றி எழுந்த ஆரவாரத்தினும் பெரிதாகும்.

பரணர்.

## 247 பாலை

இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது

கழுவாத முத்தாற் கோத்த மாலை தூங்குகின்ற அழகிய முலைகளுடைய நல்ல மாட்சிமைப்பட்ட மார்பு தனிமையுறும்படி பிரிந்தவர் பொருள் புரிந்து வந்து அருளாராயினார்.

கரிய கரடிக் கூட்டத்தின் அழல் எழும் வாயுடைய கடுவன், கரிய கொம்புடைய இருப்பையின் வெள்ளிய பூவின் கூழ் போன்ற புற்றின் பெரிய தலையைப் பெயர்க்கும். இவ் வகையான காடுட் கடத்தற் கரிதென எண்ணார். பகைவர் மடிதலின் போர்முனை பாழ்பட்ட அவ்விடத்தே வருகின்ற ஆட்களைப் பார்த்துக் கொலைத் தொழில் வல்ல யானை சுரத்தைக் காவல் காத்து நிற்கும், இவ் வகையான இடையூறுடைய கவர்பட்ட வழிகளையும் அவர் நீந்தினர். நாறிய பிணங்களை விரும்பிச் சிறகுகளும் நீண்ட கழுத்துமுடைய பருந்துகள் கூடும் உயர்ந்த சிகரமுடைய மலையைக் கடந்தோர், வாழ்வாராக.

—மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்.

## 248 குறிஞ்சி

இது, இரவுக் குறிச்சிறைப் புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லியது.

தோழி! இரவில் நிகழ்ந்த நகைக்கத்தக்க தொன்றனைக் கேளாய். ஆண் பன்றி, வலிய நாயைக்

கொன்று தனது வலிய குட்டியைத் தழுவிக்கொண்டு, குட்டிகள் பின் தொடாகின்ற தனது இளைய கூட்டத்தோடு (குட்டிகளோடு) தொங்குகின்ற முலைகளுடைய பெண் பன்றி நீங்கக், காட்டை விட்டு அரிய வழியிடத்தே ஓடுங்கிய இடத்தில் ஆளைப் பார்த்து நிற்கும். இவ் வகையான அஞ்சாத பன்றியைக் கானவன், தொடுத்த கூரிய அம்புடன் குறுகினான். மூட்டு வாயுடைய தனது அம்பு செல்லல் விலகாது அரிய வழியை மறிக்கும் அப்பன்றி, தனது பெரிய வலியை ஒத்ததென்று நினைத்து அவன் அதனை எய்யாது செல்வான். இவ்வகையான மலைநாடன், மிகக (மற) போர் செய்தலின் விரிந்து உயர்ந்து குவிந்த மார்பிடத்து அணிந்த பூக்கள் சோர்கின்ற மாலை, எருதின் ஏரிமீது இட்ட கயிற்றைப்போல அழகுடன் அசைய, வீட்டிடத்தே வந்து நின்றதை அன்னை கண்டாள். அவள் விரைந்து எனது முகத்தைப் பார்த்து நல்ல காரியம் என்று சொல்லி நகைத்துச் சென்றாள். —கபிலர்.

## 249 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

தோழி! கேட்பாயாக. பல நாளாக இவ்வூரிடத்தே எழும் அம்பல் எதற்கு

பல பூக்களுடைய காட்டிடத்தே சிறிய நிழலில் இருந்து, மயிர்ப்பகாற கட்டிய மாலையுடைய மழவர் இளம் பசுவைக் கொன்று இறைச்சியைத் தின்பர். இவ் வகையான புலால் நாற்றமுடைய இடத்தை அளைந்து வந்த புழுதியையுடைய கோடைக் காற்

றின் ஓசையை, நீண்ட மலைச்சாரலில இரையைத் தேடச் சென்ற வாள்போன்ற வரியுடைய புலி செய்தது என்று நினைத்து, மான் கூட்டம், வேறு வேறாகப் பிரிந்து செலலும் வழிகளில பயந்து அலறி ஓடும். இவ் வகையான மூங்கில் வாடுகின்ற உயர்ந்த மலையைக் கடந்து சென்றார் காதலர். இவ்வாறு சென்றவர் நீண்ட வாரை இறுகக் கட்டிச் செய்ததும், வரிந்த தாழக்கோலை யுடையதுமாகிய தெளிந்த ஓசையுடைய கிணைப்பறை யுடனபாடும் பாணர் இரப்பின், தினமும் பொன்ன கொம்புக்குப் பூண இறுக்கிப் பொன்மாலை சூட்டிச் சாந்து பூசிய உயர்ந்து விளங்குகின்ற உயர்ந்த ஏரியுடைய எருத்தை முன்னே கொண்டுவந்து. மிகுந்த உணவுப் பொருள் களைக் குவித்து, உயர்ந்த தேரையும யானையோடு கொடுக்கும், விளங்கிய ஆபரணங்களும பல வேறு பண்டமு முடைய முசுண்டையின வேம்பி ஊர் போன்ற எனது உயர்ந்த அழகு தொலையினும், அருளார்.

—நக்கீரனார்.

## 250 நெய்தல்

இது, தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது.

தோழி! கேட்பாயாக. மயங்குகின்ற துளிகள நிறைந்த திரை வருத்துகின்ற ஒடுங்கிய நிலையுடைய புன்னையின வண்டுகள ஒலிக்கின்ற பூங்கொத்து களின் நுண்ணிய தாது வரியாக உதிர்ந்து கிடத்தலில் கடற்கரையின் மெலலிய மணல் மணங்கமழும். அவ் விடத்தே, அழகிய கூட்ட மாகிய ஆயத்தாரோடு

கலந்து விளையாடும்போது, தாமரை மொட்டு அலங்கரிக்கும் உயர்ந்த தேரையும் இளையரையும் பின்னே விட்டு மாலையும் கண்ணியும் அணிந்த ஒருவன் வந்தான் வந்து எமது அழகிய வீட்டை புகுந்தான். புகுந்து யாதும் மறுமொழி பெருனுயப போயினன. அதற்குத தாங்கரிய துன்பத்தோடு பெரிய தோளகள் சோர்ந்தாய். அதனால் அழகிய வலையுடைய பரதவர் வாழும் கடற்கரைச் சிறுகுடியிடத்தின் கொடிய வாயுடைய பெண்கள பழிதூற்றலின், அதற்குக கலங்கிக் கையிறை யிட்டு வளை நெகிழ்ந்த நம்மோடு இராககாலததுத் துறையும் உறங்காதாகும்—இது ஏன? தோழி! சொல்வாயாக.

—செல்லூர் கிழார்மகனூர் பெருமபூதங் கொற்றனூர்.

## 251 பாலை

இது, தலைமகன பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.

கோசர், காற்றைப்போல் விரைந்து செல்வதும் வெற்றிக் கொடியுடையதுமாகிய அலங்கரிக்கப்பட்ட தேருடையர். அவர்கள மிகப் பழைய ஆலமர முடைய அரிய பெருமையுடைய **பொதியமலை** யிடத்தே இனிய முரசிடததில் குறுந்தடியால் அடிக்கும் ஓசை மிகும்படி போர்முனையை அழிததபோது **மோகூர்** பணியாதாயினன. அதனால பெரிய சேனையை யுடைய புதிய **மோரியர்** பகைதது வந்தனர். அவர்களின் அலங்கரிககப்பட்ட தேர்ச்சில்லு உருளும் பொருட்டுக குறுககே கிடந்த வெள்ளருவி பாயும் பாறையை வெட்டிப பதிததனர் அப் பாறைகளுககு

அப்பால், முன் தன்னிடத்தினின்றும் தப்பிய அழகிய நிறமுடைய வலிய புலியை, பெரிய நிலம் நெளியும்படி குத்திக்கொன்ற வெற்றியோடு குற்றமில்லாத வெள்ளிய கொம்புடைய யானை பாதுகாப்பின்றி உறையும். இவ்வகையான தேக்க மரம் நெருங்கிய சோலையுடைய தொலையாத வழியிடத்தே காதலர் சென்று, அரத்தினால் அராவிச் செய்த அழகிய வளையல்களை நெகிழும்படி செய்தார் தோழி! கேட்பாய், அவரிடத்தே தூது செல்லுறா. தோளவாய்க் கூந்தலுடைய அழகிய நெற்றியிடத்துப் பசலைகொண்டு அழகிய மின்னுகின்ற ஆபரணங்கள் நெகிழும்படி சோர்ந்தன. வருத்தத்தோடு நாம் துன்பமுறும் அரிய துயரைக் கேட்டால் நம்முடைய செல்வத்தைப் பெற்றுடைய அவர் அவ்விடத்தே இறங்கார். —மாமூலனார்.

## ௨௩௨ குறிஞ்சி

இது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

விலங்கு இடப்பக்கத்தே வீழ்தலாகிய அழியாத வெற்றியுடைய வேட்டையில், வாள்போன்ற வரியுடைய புலி நடுங்க, வெற்றியுடைய சிங்கம் உயர்ந்த நெற்றியுடைய யானையின் புகர் முகத்தே பாய்ந்து வெள்ளிய கோட்டில் தங்கும். இவ் வகையான, குளிர்ந்த வாசமுள்ள சோலையுடைய பெரிய மலைச்சாரலில் ஒரு வேலைக் கையிடத்தே ஏந்தித் தனியனாய் வருதலையும் அவன் அஞ்சமாட்டான். யானும் கண்ணீர் வடியும் கண்ணளாகி வருத்தத்தோடு தனியளாய் இருத்தலை ஆற்றமாட்டேன்.

தோழி ! யாது செய்வோம. இடைடங்கொடியின பஞ்சுபோன்ற சூடுடைய விரிந்த குளிர்ந்தமலர் உதிருமபடி துளிகளை வீசி ஒளியோடு மழைபெய்த நடு இரவில,எறிகின்ற திரையின நீரதது ளி சிதறும சிறிய அணையுடைய பெருங குளத்தைக் காவல் காத்து நிற்கும் காவலனைப் போல அன்னையும நிததிரையை மறநதாள. (குளததைககாத்தல அணை உடையாதபடி).

—நக்கண்ணையார்.

## 253 பாலை

இது, தலைவன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது

"தினமும் பசலை பரகக, எனது உடம்புமவருநது கினறது. சடுதியில அன்னையும் அமைதியில்லாத முகத்தினளாயினுள். அலரோ, பொனபூவணிந்த கோங்கரைத துரததி நாடுகள பலவற்றைக் கவர்ந்த பசும பொன்னுபரணமணிநத பாண்டியனது பொன் மிகுநத பெரிய நகராகிய கூடலிடத்து எழுப்பிய இனிய ஓசையுடைய வாத்தியங்களின் ஒலியினும பெரிதாகும. இவ்விடத்து நான் சில நாடகள உயிரோடு இருக்க மாட்டேன்போலும," எனப் பல வறறை நினைந்து வருந்தாதே, தோழி! கேட்பாயாக. பயப்படாத வடுகர் இருணட இரவில அழகிய பசுக கள் உய்யும்படி பகைமுனையைக் கடநது பல பசுக் கூட்டங்களினிடையே பதுஙகியிருபபர். இருந்து கூட்டமாகிய கோவலரின நீணட கீழ்க்கை அடிததது அழைககும அரவததை அறிவர். அறிநது விளஙகு கின்ற ஏரியுடைய நலல ஏறறைத்தினம களவாடிவரு

வர். அதன் தழும்பும் சொறியுமுடைய கழுத்துத் தாழும்படி கட்டிய அழகிய உட்டுளையுடைய மூங்கிற் குழாய் நிறைய உணவை வைத்தடைத்துத் தொழுவி னின்றும் கொண்டு வந்து, மன்று நிறையும்படி நிற கும் கன்றோடு கூடிய நிரைகளோடு மேய்ச்சலுக்குக் கொண்டு செல்வார், வலிய தோளுடைய வடுகர். வடுகரது தலைவனது பெரிய புகழுடைய எருமை நாட்டி லுள்ள அரிய வழியைக் கடந்து அவர் சென்றார். சென்றாராயினும் குரும்பைபோன்ற மெல்லிய முலை யும், அரும்பிய சுணங்கும், இடையை மறைத்து இடைக்குக் கீழும் தழைத்து வளரும் நீண்ட கூந்த லும், வானிடத்துச் சந்திரன் போன்ற பொட்டும், சந்திரனைப் பதித்தாற்போன்ற அழகிய முகமும், ஒளிய சூடு விளங்குகின்ற அசையும் காதணியும் உடையவளாகிய அவளது பார்வையை அவர் அயர்ந்து நினையாமல் இருக்கமாட்டார்.

—நக்கீரர்.

## 254 முல்லை

இது, வினைமுற்றி வந்நெய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

நரை கலந்த வாசமுள்ள மிருதுவான கூந்த லுடைய சிவந்த முதிய செவிலித்தாயர் பலவகை யாகப் பாராட்டுவர். அப்பொழுது பொன் சதங்கை அணிதலால் அழகுபெற்ற சிறிய அடி, மணன மிகுந்த முற்றத்தே நிலத்தை வடுச் செய்யும்படி நடவாள். வீட்டிலுறையும், சிவந்த காலுடைய புறாக்கள், துணை யோடு குறுகப் பறந்து மேலே செல்லும்படி அவை களோடு விளையாடுகின்ற தோழிமாரைக் காணும்

தோறும் என காதலி என்னை நினைவாள். நல்ல நெறி யையுடைய அவளது தனிமையாயிருப்பதால் கலங்கு கின்ற துன்பம் அகல, வேந்தனுக்கு உறு தொழிலின் பொருட்டு வேறு தேயத்துக்கு வந்த யாம் வினை முடித்தேம். அவ் வாறாதலின் நீயும், பந்தியில் நிற்றலை வெறுத்ததும் தேரை இழுக்கும் தொழிலில் வல்லமையுடையதுமாகிய குதிரை பூட்டிய அழகிய அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த தேரின் சில்லு அழுத்து தலின் நுணணிய மின்னற்கொடி போல பசிய பயிர் சிதைய, தவளமுல்லையோடு பொருந்தித் தணணென மணங்கமழும் பூக்கள் நெருங்கிய மூல்லைக் காட்டின நீண்ட இடம் பின் படும்படி, தேரைச் செலுத்து வாயாக

என என்பாயாகில யான் சொல்லிய காலம் நீடா மல், விரைவாக மாலை மணியால் குதிரையிடத்துள்ள எமது வருகையை அறிவிக்க ஊரை அடைந்து அவ் வழகுடையவளோடு யாம் மகிழ்ச்சி யெய்த

—மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

## 255 பாலை

இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றுமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.

உலகு இடம் விட்டுச் சென்றுற்போன்ற பெரிய நாவாய, புலால் நாற்ற முடைய திரை வீசும் பெரிய கடலைக் கிழித்து இரவும் பகலும் அசைவில்லாது செல்லும். விரைந்து செல்லுகின்ற இயல்புடைய காற்று ஆட்ட மணற் குன்றுகள் உயர்ந்த மணல் செறிந்த அகன்ற துறையிடத்தே மீகான் கப்பலை

மாடத்தில எரிகின்ற வெளிச்சத்தால் திசை அறிநது கரைசோடபன. இவ்வாறு தம முயறசியின பொருட்டு சென்ற காதலர் பல நாட்கள கழியாமல, வாட்டுகின்ற துன்பம நீங்குமபடி வருவார். தோழி மருத நிலம் போனறு புனல் பொருகின்ற நமமூரிடத்திற புதரிடத்தில காககணரு செடிபோன்ற பகன்றையின பெரிய மலரின அலலி, பலாககனியின புறமபோன்ற பழமுடையதும கூதளததின இலைபோன்ற இலையுடையதுமாகிய பாகற கொடியை அசைககும. இவ்வாறு அறனிலலாமல அசைககின்ற பெரிய வாடை காவலுடைய மனையின மாடததே இராககாலததில வீசும். அதனால் திருநதிய ஆபரணங்கள் நெகிழநது பெரிய அழகுவாட நிரைதத வளைகளசெலலும தோளேனேன. அவருககுத் தூதாகச செலலும அன்பினரைப் பெறாமல நான இவ்வாறு சொலலி யனுபபுவேன.

—மதுரை இளநாகனார்.

## 255 மருதம்

இது, தோழி தலைமகறகு வாயின மறுந்தது.

பின்னி வளாந்த வளளைக கொடியின நீணட இலைக கூடலுள் நிததிரை கொண்ட பெரிய நக முடைய ஆமை சுணடி விட்ட கலலைபபோல அகன்ற துறையிடத்தே செலலும. சென்று திறந்த வாய நிறைய நுங்கின் ஒழுகுகின்ற களளை அருந்தும அருந்தி மகிழநது நடககின்ற நடையோடு இனிய பெரிய வயலைக கலககிய பககததே உள்ள ஆமபலின மெலலிய இலைகளிடத்தில ஒடுங்கியிருக்கும். இவ் வகையான ஊரையுடையவனே. பொய கூறு

தீர்; உனது மாயத்தை நான் அறிவேன். அதுதான் நாம் அறிந்திருப்பதை நீ யறியாய். நெற்று கரிய அழகிய கண்ணுடைய பரத்தையோடு அழகிய வையை யாற்றின் புதுப்புனலை ஊரன் நீயோடு ஆடினாய். அப் பரத்தையின் தோழியர் அதனை வெளிவராது மறைக் கவும் அது நில்லாது பெரிய அலரையாயிற்று.

அழகிய பழைய புகழ் நிறைந்த பல பூக்களை உடைய வயலிடத்துக் கரும்பு நெருங்கிய சோலை யுடையது, பெரும் புகழ் பெற்ற கள்ளூர் என்னும் ஊரிடத் தில் நல்ல நெற்றியுடைய இளம் பெண்ணின் கற்பை அழித்த அறனில்லாதவன் தான் அறியேனென்று கொடிய சத்தியஞ் செய்தனன். அதனை விசாரித்த சபையார் தளிர் நிறைந்த பெரிய கிளை செறிய பற் றிய நெருப்பிட்டதிலே அவனை இட்டுக் கொன்றனர். அப்போது அப்பெருமையுடைய சபையிடத்து எழுந்த ஆரவாரத்திலும் பெரிதாகும் வையை யாற் றில் பரத்தையோடு நீராடியதால் எழுந்த கௌவை.

— மதுரைக் கூத்தனார் கடுவன் மள்ளனார்.

## 257 பாலை

இது உடன்போகா நின்ற தலைமகட்குத் தலைமகன் சொல்லியது.

வேனிற்காலப் பாதிரியின் வளைந்த பெரிய தேன் பொருந்திய மலரின் வாடல் விடியற் காலத்தே சுரத் திடத்து நாறும். இவ் வகையான சுரத்திடத்தே, உள் மணியிட்ட சிலம்பணிந்த சிறிய அடிகள் சிவப்ப எம்மோடு வழியிடத்தாயினை. வருந்தேல். உனது பொலிந்த கூந்தல் நெருங்கும்படி வாரி அரும்பில்லா மல் மலர்ந்த பெரிய பூவுடைய ஆச்சாமரத்தின்

வண்டுகள் மொய்க்கின்ற மலரை வைத்து வேய்ந்த உனது தேன் வழிகின்ற கூந்தல் தலையைத் துவளச் செய்யும். வண்டு ஒட்டிப் பாதுகாக்க அறியாது, அழகாக மெலிவிய திரண்டு விளங்கும் வளைகளை ஒலிக்கும் முன்கையும், மெல்லிய இறையுமுடைய பெருத்த தோளும் விளங்க வீசி நடக்க வல்லவளாயினை. கள்வர் பகை மிகுந்த கவர்பட்டுச் செல்லும் வழியைக் காணும்பொருட்டு ஏணி சார்த்திய கவர்பட்ட தளிர்களையுடைய மாமரத்தின் நார் உடைய பக்கங்களில், யானை சாறைச் சுவைத்து உமிழ்ந்த சாரமில்லாத கோதுடைய சக்கை கல்லாத உமணருக்குத் திரட்ட உதவும் இவ்வாறு துன்பஞ் செய்யும் இமயமலையிடத்தே மெல்லிய உச்சியுடைய கறையான் புற்றில் ஒடுங்கியிருக்கும் இரையை விரும்பி வெள்ளிய பாம்பு விளங்கும்படி இளைய கரடி, இருந்து கவரும்.

—உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

## 258 குறிஞ்சி

**இது, அல்ல குறிப்பட்டு பதிப்பெயர்ந்த தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது**

நெஞ்சே! அரிய காவலுடைய பாழி நகர் நன்னனுதியனுக்குரியது. மழைய முதிய வேளிர் (மிக்க) பொன்னை அவ்விடத்தே பாதுகாத்து வைத்தனர். அவள் அப்பொன்னினும் அருமையுடையவள் என்று நீ நனகு அறிவை ஆதலின் அவளை மறப்போம் எனினும் அதற்கு உடன்படாய. குளிர்ந்த மழை தவழுகின்ற நீர் ஓடுகின்ற பெரிய மலையின் நடுவில

பெருங்காற்று வீசும். அவ்விடத்தே மயக்கந் தரும் இருளிடத்திற் சென்று வருந்துதல்போல மாயாது திருப்பாயாக. நெஞ்சே கேட்பாயாக. தினமும், மெல்லிய தன்மையுடைய சிறுமியின் நல்ல மார்பை விரும்பிப் பாம்பு இரைதேடுகின்ற அச்சந் தரும் ஒடுங்கிய வழியிடத்து இரவிற் சென்றும் அவள் அருமைபடி பெறாய். புலவென்ற கண்ணுடையை யாய் வருந்தி உலகத்தோர்க்கெல்லாம் பெரிய சிரிப்பு உண்டாகும்படி, காமம் கைகடத்தலின் உண்டாகும் பெரிய அரிய துயரைத் தந்தாய். —பரணர்.

## 259 பாலை

**இது, உடன் போக்கு நேர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.**

வேலும் விளங்கினது. இளையரும் தொடுத்த தாரையும் கையினின்ற கட்டியதழையையுந் தந்தனர். நிலம் நீரில்லாத வெம்மை நீங்க மழை பெய்தது. சோலைகளிடத்து, இலை சொரிந்து குறுகிய தளிர்களை நீட்டிய மரங்கள், நறியமலர்கள் வேய்ந்தனபோலத் தோன்றிய பல பூக்களோடு தேனொழுகும்படி நெருங்கின. கானமும் மிக நல்ல பனி நீங்கிய இளவேனிற் காலத்து மாலைக் காலத்து நிலா பாலென்னப் பரந்து அழகு தரும். அம்மாலை தூதாக வந்தது போன்றது. நீயும் கலங்காத மனத்தளாகி எனது வார்த்தையை விரும்பிக் கொள்வாய். விரும்பத் தகுந்த தகுதியுடையவளே! தெற்றி உயர்ந்தாலும், வயலைக் கொடி வாடினும், நொச்சியின் மெல்லிய கிளையிலுள்ள வளைந்த பூ வாடினும் உன்னினும் அறியாமையுடையவள் உன்னைப் பெற்ற அன்னை. துயரைத்

தாஙகி, உனது தமையன மாரின புலியை ஒத்த செருக்கைப பார்த்து ஆலோசியாது அவன் இனனும உன் மூலைகளைத தோயவாளுகை. —கயமனார்.

## 260 நெய்தல்

**இது, இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொலலெடுக்கபபட்டுத தலைமகள் சொலலியது.**

சூரியன சாிநதது, மலைகள நிறம விளங்கின; வணடின கூட்டஙகள மலர்களிற பாய்நது ஊதின; தாழஞ் சோலைகளில கடற குருவிக கூட்டங்கள் ஒலித்தன; திரைகள ஒலி அடஙகின; படவுகள் மீன் பிடிக்குந் தொழிலை மறந்தன. கரையிடததே ஆடுகினற நணடுகள், புற்றிடத்தே சென்றன, செககர் வானம் தோனறினது. துணையைச சேருகினற அன்றில கடறகரைப் பனையின உள மடலிடததே சேர்ந்தது. கழியிடததுளள மலர் கமழுகினற வாயை மூடின சோலையிடதது வீட்டருகின நினற புனனையின் நறிய பூககள பொனனிறங கொணடன. இவ்வாறு பகல மெலல மெலலக கழிந்து இராவானது. யான் இபபொழுது என்ன துயரை அடைகின்றேன. முதிய மரததிலுறையும் பிளவுபட்ட வாயுடைய அன்றில சடுதியாகக குழறும பேய் திரியும் நடுச்சாமத்தில், நெஞ்சை இழுககும வருததஞ் செயத அனபரது அறிவை மெச்சிறேன. —மோசிக்கரையனார்.

## 261 பாலை

**இது, புணர்ந்துடன போயின காலை இடைச்சுரத்துப் பட்டதனை மீண்டு வந்தகாலத்துத் தலைமகன் தோழிககுச் சொலலியது.**

நீ காட்டுப பாதிரியின விளஙகுகினற கரிய தகடு போனறு ஒளிதரும பூ வேனிலுககுப் பூதத புனலிப்

பூவோடு விரவித் தெரியும்படி ஐங் கூந்தலிடத்தே சூடு. மெல்லிய பூங்கொத்துகளுடைய தேன் ஒழுகும் ஆச்சாவின் மலனச் செருகு. பெரிய அழகிய விளங்குகின்ற வளை ஒலிக்கும்படி கையை வீசிச் சிலம்பு ஆரவாரிக்க மெல்லிய ஒதுக்கத்தோடு மெல்ல மெல்ல நடந்து உனது அழகிய முதுகை நான் பார்க்கும்படி செல் என்றேன். அவள் செல்லுதற்கு அஞ்சி விரைவாக ஒருக்கழித்த பார்வையோடு அழகு பெறச் சரிந்து நின்று தலை இறைஞ்சினாள். அதனைக் கண்டு யாமும் நெருங்கிய கல்லுடைய வழியே செல்லேமாய், அவ்விடத்தே தங்கினேம். பெரிய புலி யானையைக் கொன்று கூடுகின்ற ஓசையும், (களுணாடு) களித்து (ஆறலைக்கும்) வில்லுடையோர் குறும்பிடத்தே ஒலிக்கும் கடிய ஓசையுடைய கடிய துடியின் தொனியையும் கேட்டேம் (ஓசையையுங் கேட்டுத் தங்கினேமென வினைமுடிக்க)

—பாலைபாடிய பெருங்கடுங்கோ

## 232 குறிஞ்சி

**இது, இரவுக்குறிக்கண் தலைமகட் புணர்ந்து நீங்குந் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது**

பழங்கொல்லையுடைய பசிய நாட்டிடத்தில் கொடிகளை மறைத்துப், பல எருதுகளைப் பூட்டி உழுது, சிவந்த மணலுடைய நிலத்தே விதைத்த பயறு, செய்யப்படும் வினையினாலே செறிந்து வளர்ந்து, நெருங்கிய பசிய இலையுடையதாயிருக்கும். அப்பசிய பயற்றிடத்தே பசுப் புகுந்தாற்போல மெய்மொழியுடைய கோசர் தந்தையின் கண்களை அருளின்றிப்

பிடுங்கிக் குறைப்பட்டனர். அச்சிறுமையைப்போல, இவள், உண்கலத்திலுண்ணாளாள். வெள்ளை உடை உடாள்; சின்மை உருவு கொண்டது போலானாள். வீரம் மிகுந்த சேனையும் வெற்றியுமுடைய குறும்பியன், போரில் நல்ல பெருமையுடைய நீதியனுக்கு (அக் கோசர் மீது கோபமூட்டும்படி கூறி, அவனால் அக்கோசரின் இனிய உயிரைப் போக்கினான். அதைக்கண்டு சினமாறிய அன்னி மிஞிலி போல யாம் பெரிய மகிழ்ச்சி உடையோமாயினேம். பூக்களாற் பொலிந்து அருவி நீர் ஒலிக்கின்ற நீர் விளங்கும் மலையிடத்து, நுணுகிய பல துளிகள் பறவைகளை நனைக்கும், வண்டு மொய்க்கின்ற களவின் கொடையால் மகிழ்கின்ற பேகனது பெரிய மலை போல, நாற்றங் கமழ அழகிய இனிய மார்பையுடையவன் வந்த வாறு என்னே! (புதாகலா மேலே கொண்ட கல் மாமலை எனக்கூட்டுக.) —பரணர்.

## 233 பாலை

**இது மகட் போக்கியதாய் சொல்லியது.**

அசைகின்ற திரையுடைய பெருங் கடலிடத்தே, சூரியன், விளங்குகின்ற கிரணங்களைப் பரப்பி உயிர்கள் தொழும்படி தோன்றிய தோன்றி நீர்நிலைகள் வற்றும்படி பரந்து, நல்ல நிலம் பசுமையற்றுப் பயன் கெடும்படி வறட்டும் இவ்வகையான காலத்து பல வேறு கவர்பட்ட வழிகளையுடைய பெரிய காட்டிடத்து, வழிச் செல்லும் புதியவர்கள் வருவதைக் காணும் பொருட்டு வில்லுடைய ஆறலைப்பார். உயர்ந்த யாமரத்தின் கொம்பர்களில

ஏறியிருந்து பார்ப்பார். இவ்வகையான அரிய சுர வழியே என் மகளைக் கொண்டுசென்ற கொடிய வனது வஞ்சகமான துணிவை யான் முன்னம் அறியேனாயினேன். அறிந்திருப்பேனாயின். ஐயோ! விளங்கும் வேலையுடைய சேரன் விரும்பிக் காக்கின்ற வஞ்சிநகர் போன்ற எனது அழகிய மனை விளங்கும்படி, அழகிய நெற்றியுடை மகளின் அரும்புகின்ற முலையின் அகலத்து இன்பமான துயிலைத் துன்ப மில்லாது அவன் கொள்ளுமாறு இனிதாகச் சேர்த்திருப்பேன். —கருவூர் கண்ணம்பாளனார்.

## 264 முல்லை

இது, பருவங்கண்டு வன்புறை எதிரழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

மழை இல்லாத வானிடத்தில் நட்சத்திரங்கள் விளங்கினாற்போல குழை நெருங்கிய முசுண்டை வெள்ளிய பூக்களைப் பூத்திருக்கும். அம் மலர்போன்ற வரியுடைய வெண்காந்தளின் வளைந்தகுலையிடத் துள்ள வெள்ளிய பூவைக் கவர்பட்ட கோலுடைய இடையர் மிகவுஞ் சூடியிருப்பர். அவர்கள் இராக் காலத்து மழைக்கு வருந்திய பல பசுக் கூட்டத்தோடு, நீர்வடிகின்ற மாலையினராய ஊரிடத்தே செல்வார் கள். மிகவும் நாட்பட்டு வந்த மழைக்கு நீர் மிகுந்து எழுந்த வேகமாயோடும் நீர் தெருக்கள்தோறும் பாயும். பெரிய ஓசையுடைய முழக்கத்தோடு சிறந்து மிகவும் இருண்டு கூதிர் நிறகின்றது. இக்காலத்து எமது நிலைமையைக் காதலர் அறியாராயினும், அவர் தமது நிலையை அறிந்தாரோ? அவர் உயர்ந்த நடை

யும காயகினற சினமும உடைய யானை, இருள் போலச சூழநது நிறக அஞசும்படியாகத் தஙகிய சேனையையுடைய கொடிய கோபமுடைய அரசனது பாசறையிடததர். —உம்பற்காட் விளங் கண்ணனர்.

## ௨௩. பாலை

இது பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றுமை மிதூரத் தோழிக்குச் சொல்லியது.

தோழி கேட்பாயாக. விளங்குகினற நிழலிடத்தே யுள்ள அறலைப் போனற கருமை கூநதலையுடைய பாவைபோனற நாம இரஙகும்படி, நமமைத் துறநதார். அநதுற ஒளளிய வளைகள நெகிழும்படி சோாநது வருநதததோடு கண்களிடத்தே நீர சொரிநது இருககினறோம. அவரோ மலையை யடைந்தனர். அவ்விடததில வலிய வில்லையும் கொடிய பார்வையையுமுடைய ஆறலைப்போா இனிய ஓசையுடைய இடிபோன்றதை வெட்டி எடுதததுபோனற நிணம பொதிநத இறைசசியை நெருப்பில வைத்தெடுப்பார்; அசசந தரும பேய்போல வெளளிய நிறமுடைய ஊனை வேட்கை நீஙகக, தினபா; குறறந் தீர விளைநத நெலலாற சமைதத கள்ளைப பருகி மகிழுவர். புலால மணக்கும் வாயராயும கழுவாத கையராயும, குடுமியுடைய கூகைகள் திரண்டிருந்து குழறுகினற, சிறிய ஊரின பககததிலுள்ள மராமரத்தின கீழத தூஙகுவர். இவ்வகையினதும, சிவநத நெறறியுடைய யானையுடையதுமாகிய வெங்கடமலையைச் சாா்ந்த போா முனைபோன்ற அரிய சுரத்தைக்

கடநதவர் நம்மினும பெரிதாகக் கருதிய பொருள், புகைபோற் பொங்கி எழுநது ஆகாயததில உயாந்து ஊருவதும, பனி நெருபபுக் கொடிபோலத் தெரி கிறதுமாகிய, இமயமாகிய சிவந்த மலையை ஒததேதோ? பல புகழ் நிறைநத வெல்லும போரையுடைய நந்தர் அழகு மிகுநத பாடலிபுரத்தில் குவித்துக கஙகை நீரில மறைதது வைதத திரவியமோ? (பொருள, திர வியமோ எனறு சோகககவும.) —மாமூலனர்.

## 266 மருதம்

**இது, பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்குத் தலைமகன் சொல்லியது.**

கரைகள நிறையுமபடி நீணட பரப்பில புதுப் புனல உயர்நது பாயநதது. அபபொழுது நேறறு வலிய களிறறு யானையைத் தெப்பமாகத் தழுவி. நரநதப புல் நாறும் குவிநத கூந்தலுடைய இளைய பரததையோடு புனலாடினுய்; நீராடும் உடையோடு நீரிடததே திரிந்து ஆடிய அவளது உயர்ந்த அழகிய கணகளைப பார்ககுநதோறும பார்க்குந் தோறும நீஙகாயாய காமங் கைகடததலின் நாணிழந்து அவ ளுடன் ஆடினுய, எனறு கூறுவா.

யாழ ஓசையுடைய வீதிகளுடைய நீடூருக்கு அரசனுகிய கூரிய வாளுடைய **எவ்வி** தனது ஏவல கேளாத **நெடுமிடலைக** கொனருன. (அதனுல) பசிய ஆபரணங்களால அலஙகரிககபபடாத **அரிமணவாயி** லிடத்துள்ள **உறந்தூரி**டத்து அவன விடியறகாலையில கள்ளுடைய பெருஞ சோறறுவிழா எடுத்தான. அவ் விழா ஆரவாரமபோல நீ பரத்தையோடு புனலாடிய கௌவை பெரிதாகின்றது

அயலே உள்ள வயலுழவர் எழுப்பிய பெரிய ஆரவாரத்துக்குப் பயந்து பறந்த மயில் தெய்வமகளிர் உறையும் மலையிடம் அழகுபெறவந்து தங்குவதும். அழகிய மணிவிளக்குடையதுமாகிய சீரலைவாயிடத் துறையும் போர் மிக்க முருகன் மீது நீ இப்போ செய்த சத்தியம் எமக்கும் பெரிய துன்பத்தைத் தரும்

—பரணர்

## 267 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமை கண்டு ஆற்ற ளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

நெஞ்சை இளகப் பண்ணத் தக்கவற்றைக்கூறி அன்பு கலந்து நீங்காத வஞ்சினஞ் செய்த காதலர், சென்ற கருமம் முடித்துக் கொள்கை (மறந்திருத் தல்) வேறுயிருத்தல் ஏன்? என்று நினைந்து வருந்து தல் பெரிதாயினை.

கோடைக் காற்று, கொம்பரிடத்தே பாய்ந்து இருப்பையின் பூவை உதிர்க்கும், அஞ்சத்தக்க அக் காட்டிடத்து இருப்பையின் குவிந்த முகிழ்கள் காட் டுப் பூனையின் அடிபோல இருக்கும். அதின் மிகுதி யான பூக்கள், கொம்பைக் கடைந்தது போலிருக் கும். அப் பூக்களை காலிடத்து மிக்க மயிரினை யுடைய கரடி பொறுக்கி உண்ணும். மைபட்டது போன்ற கரிய முகமுடைய குரங்கின் கூட்டம் பசுமையற்ற நெடிய மூங்கிலிற் பாய்தலின், விரை வாக மூங்கிலினின்றும் விழும் வெண்ணெல், பாறை யில் பரந்து கிடக்கும். அந்நெல் நகத்தினால் நெரிக் கும் ஓசைபோல பொரிந்து பொங்கும். இவ் வகை

யான பல மலைகளிடத்துள்ள அரிய பல வழிகளைக் கடந்தவர் பழியுடையவரல்லர். தினமும நமக்கு அருளியவரை நினைந்து தெளியாத, விளங்கும் அழகிய வளைகளை நெகிழ்ந்ததோளே, தவறுடையது தோழி! (தெளியாத தோள எனக் கூட்டுக.)

· பாலை பாடிய பெருங்கருங்கோ.

## 2:8 குறிஞ்சி

இது, குறைவேண்டிப பின்னின்ற தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது

தோழி! கேட்பாயாக பொறியும வரியுமுடைய பூட்போன்ற நெற்றியுடைய யானையோடு புலி, போர் செய்தலின குழைந்த இரத்தம் பிரண்ட இடத்தின புலால் நாற்றத்தை வேங்கைப் பூவின மிக்க நாற்றம், காட்டுமலலிகைப பூவோடு சேர்ந்து மாற்றுகின்ற மலைநாடனோடு, குற்றமில்லாத காமங கலந்த காதல உணடென்ல நன்றுகும. ஆனல் நீ அதனை அறியாய போல ஆராயாது கூறுகின்ருய். நாணமும நட்பும் இலாதார், யான் ஒருத்தியை யன்றி இவ் வுலகத்தில் வேறு யாருமு இலலை. இனிய உயிரபோன்ற உன் னேடும ஆராயாது, முளையுடைய மூங்கில கிளை களுடன் மிகுந்து நிற்கும், பெரிய புகழுடைய எனது தந்தையின அரிய காவலை ஆராய்ந்து பார்த்துப்பின் வருந்தாத செயலாகிய பெரிய பழியலலாததனைச் செய்தேன். —வடவமண்ணக்கன் பேரி சாத்தனர்.

## 269 பாலை

**இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.**

வளை அணிந்த தோள்கள் உயர்க; வருத்தமும் தீர்க; நெளிந்த கரிய கூந்தலில் மாலையும் அணிக. ஏறுகளையுடைய பசுக்கூட்டம் திரும்பிச் செல்லத் தாம் செல்லாது நின்று, பூண் இறுக்கிய வெள்ளிய வேலுடைய வீரரை (வெட்சி வீரர்) எதிர்த்த அஞ்சா நெஞ்சுடையவர்களின் நல்ல புகழை நிறுத்தும் பொருட்டு வீரக் கழலணிந்த வீரர், மாண்டவர்களின் பல புகழ்களையும் எழுதிய கற்களை, யானை மடிந்து கிடந்ததுபோன்ற குறிய குன்றின் பக்கத்தே நாட்டுவர். அவைகளை முழுக்காட்டி நல்ல மலை மஞ்சளின் ஈரமான பக்கங்கள் தெரியும்படி அம்பினால் அறுத்த நீண்ட தோல்போன்ற சிவந்த காந்தைப் பூவாற் கட்டிய மாலையை வரியுடைய வண்டுகள் ஆரவாரிக்கும்படி சூட்டித் தமது ஊருக்குச் செல்வர். இவ் வகையான அரிய சுரத்தை நமது காதலர் கடந்தார்.

தையின் தன்மையைப் பெற்றுக் குளிர்ந்த தண்ணிய மழை பெய்த கடைநாளில், பொன் காசு நிரைத்த பக்கம் உயர்ந்த அல்குலிடத்து அழகிய நிறமுடைய மாவின் பூவோடு கூடிய தழை அசையவும் காலித்து எழுகின்ற சந்திரன்போன்ற முகத்து, வாத்தியத்திலெழுந்த தெளிந்த ஓசைபோன்ற இனிய ஓசை பிறக்கவும், வண்டற்பாவையை உட்டுறையிற் கொண்டுவந்து, அழகிய நெற்றியுடைய பெண்கள் குரவை விளையாடுவார்கள் இவ் வகையான, பெரிய நீருடைய கடற்கரைச் சோலையுடைய குடியிருப்பாகிய **வாணனது** சிறு குடியிடத்தில் வணங்கி நிற்கின்ற

நெலலின புது வருவாயுடைய மருத நிலததே காலை யில வாய அவிழநத அழகிய செங்கழுநீர்போனற நின கணகளின நீரைத துடைககும் பொருட்டு (அரிய வழியைக கடநது சென்றவர்) விரைநது வநதார

—மதுரை மருனிளநாகனர்.

## 270 நெய்தல்

இது, பகற் குறிக்கண் வநது நீங்குந் தலைமகனைத் தோழி வரைவு கடாயது.

பெரிய இதழுடைய குவளை கரிய கழியிடததே மலரும் அதனைப புலால நாறும வீதியிடததே சிறு குடிகளையுடைய கடறகரையூரிடதது மீன கூட்டங் களைப பிடிககும பரதவர் ஞாழறபூவோடு சூடுவர். இவ வாறு இவர்கள சூடுகின்ற மாலைக் காலம தனிமை செய்தலினுல தோள்கள் நெகிழ்ந்தன. சிவநத இறால மீன்களைத துழாவியதும் துளிகளை வீசுகினறதுமாகிய பெரிய திரை பெரிய அடியுடைய புன்னையின வளைநத கொம்பரை நனைககின்ற கடறகரைச சோலையுடைய துறையை இவள நோககுவள். நோக்கிக கொயத பிடரி மயிருடைய குதிரையும், கொடைக் கையுமு டைய அரசனுகிய நல்ல தேரையுடைய குட்டுவனது கழுமலம்போன்ற அழகிய, மாந்தளிர்போன்ற மேனி பழைய அழகுகெட உறங்காத கண்ணளாய்க கலங் குவாள். கடவுள் உறையும் மரத்தின்மீது முள்ளாற பின்னிச் செயத கூட்டில சேவலோடு புணராத அன்றிற பேடை துனபததோடு உறையும இராக காலத்தும் நீர உமது ஊரை நினைநது செலகினறீர். யானே இதறகு வருநதுகினறேன். —சாகவாசனர்.

## 271 பாலை

**இது, செலவுணர்த்திய தோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.**

*பொறியும் வரியுமுடைய புறவின் சிவந்த காலுடைய சேவல் சிறிய புலலிய பேடையோடு தூர தேசத்துக்குச் செல்லும். சென்று ஊதமணலுடைய வழியிடத்தே கோடாங் கூப்பிட ஆராயந் தெடுத்துண்ணும். உண்டு வரியுடைய மரங்கள் வாடி நிறபதும், மழை நீங்கியதுமாகிய பெரிய இடத்தே, குறிய மலையின் பக்கத்தே இடையூறுடைய சுரத்தைக் கடந்து தூரத்திலிருந்து வந்த தாகமுடைய புதிய மாக்களின் போகின்ற உயிரைக் காத்த சுவையுடைய காய்களுடைய நெல்லியின் பல காய்களுடைய தளிரில் இருந்து குறுகுறுக்கும். இவ் வகையான காட்டைக் கடந்து அவ்விடத்தே சென்று தேடப்படும் நிலையில்லாத பொருளைத் தேடும் கருமத்தை நினைந்தனிராயின் நீர் நினைத்த கருமம் விரைவில் முடிவதாக.*

*இவளுக்கு, களிப்பு மிகுந்த கள்ளும் அழகிய தேருமுடைய* **அவியனது** *நாட்டிடத்தே அழகிய இளம் மேகங்கள் சூடித்தோன்றுகின்றவும், பழங்கள் தூங்குவனவுமாகிய மலை வெடிப்பில் உயர்ந்து வளர்ந்த மூங்கிலின் கணுக்களின் இடைபோன்ற பெரிய மிருதுவான தோள்களில் அணிந்த அழகிய ஆராயந் தெடுத்தவளை கழலுமாகில், நீர் பிரிந்து உறைகின்ற நாட்டில் அதற்கு மருந்தும் இருக்கின்றதோ?*

**—காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார்**

## 272 குறிஞ்சி

**இது, இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொலலுவாளாய்த் தோழி சொல்லியது.**

*பெரிய புலியைக கொனற பெரிய கையுடைய யானையின் புலால நாறுகின்ற புகர் நிறமுடைய நெற்றியைக கழுவ, இராககாலத்தே, தெய்வப பெணகள் உறைகினற உயர்ந்த சிகரம அருவியைத் தரும. அதனது அச்சந தருகினற வெடிபபுடைய முழையின இருளைவேலின மினனலபோனற ஒளிபோக்கும. செலலுகினற வழியை வேல விளககத தனியனாய வந்து பணிதலை முனியாது நீர் வடிகினற மலைசசாரலில சேறறு நிலத்தே நெருங்கி வளாநத காட்டு மலலிகைப் பூவோடு கூதாள மலரை நெருஙக வைத்துக கட்டிய கணணியை,வாசங் காறறுடன மணகக, அசையுமபடி அணிந்த தலைவர், பாறையிடததுமிளகு கொடி வளர்கின்ற தோட்டததிலுள்ள, குறிய இறப்புடைய குடிலாகிய நமது வீட்டிடத்தே வருவார். அதனால உடல பூரித்த மகிழ்ச்சியாலாகிய நமது நிலையைக கணட அனனை இது முருகனால நேர்ந்ததென நினைதது, முருகனைத துதிதது, இரததத்தோடு கலந்த செந்தினையைப் பலியாக நீரோடு தூவி, முருகவேளை வழிபடுவளலலளோ? பொனபோல மலாந்த வேங்கை மரத்தின் அசைகின்ற கிளைகள அழகுபெற, நீலமணி நிறமுடைய மயில கூவும அழகிய நாடனோடு பொருந்திய நமது தொடாபு என்னாகுமோ?*

**—மதுரை அறுவை வாணிக னிளவேட்டனார்.**

## 273 பாலை

இது, பிரிவின்கண் தலைமகள் அறிவு மயங்கிச் சொல்லியது.

வானிடத்தே விசையாக எழுந்த கூத்தாளப் பூ மாலையைப்போன்ற, பசிய காலையுடை வெண் கொக்கு, பரந்த சிறகுகளை வளைத்து ஆரவாரத்துடன் செழுமை பொருந்திய இடங்களுக்குப் பறந்து சென்று பூக்களோடு பரந்திருக்கும் இவ்வாறு நிலம் ஈண்டணிமை நீங்கிய முன் பனிக்காலம் வந்தது. இக் காலத்தே அழுகைக் கவாகின்ற பசலை நோய் வருத்த வும் அவர் நமது துயரை அறிய மாட்டாரோ? அவர் அறிந்தாலும் அவருக்கு நம் மனத்தைப்போன்ற மென்மையில்லாமையில் எமது ஊரை நினைக்க மாட் டாரோ? எப்படி யென்று நான் அறிவேன்? விமமி எல்லையைக் காணமுடியாத பெரிய வாடைக் காற் றோடு, முலைகளின் இடையே தோன்றி வளர்கின்ற நோயாகிய இளங்கன்று, அசைவுடைய நெஞ்சத்தே வருத்தமாகிய கால் நீட்டி, ஊரவர்கள் தூற்றும் அம்பலாகிய அழகிய கிளைகளைவிட்டு, ஆருத காத லாகிய விளங்கும் தளிரைப் பரப்பி, புலவர்கள் புகழ் கின்ற நார் இல்லாததாகிய இப் பெரியமரம், பூமிப் பரப்பெல்லாம் நிழல் செய்து, அலராகிய அரும்பைச் சொரியவும் அவர் வராதவராயினர். —ஔவையார்.

## 274 முல்லை

இது, தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது

பெரிய விசும்பு அதிரும்படி முழங்கிப் பாதலத்தை இளக்கிக் கரைக்கும்படி பெய்து சிதறு கின்ற மழையையுடைய வானம், நடு இரவிலே பருவ

மழை பெய்தது. அப்போது ஆடுகின்ற தலையுடைய செம்மறியாட்டின் கூட்டத்துக்குக் காவலாக தீக் கடை கோலில் மூட்டிய சிறு தீயைச் சொருகித், திணிந்த கயிறுடைய உறியிடத்தே பானையுடைய வனை, உடம்பை நுணுகிய துளிகள் ஒரு பக்கத்தே நனைப்ப, தண்ணடை ஊன்றி, இடையன் செல்வான். அவன் இதழை மடித்துச் சீழ்க்கை அடிக்க அவ்வோசை சென்று ஒலித்தலின், துள்ளும் ஆடுகளைப் பார்க்கும் குள்ள நரி வெருண்டு முள்ளுடைய குறுகிய பறம்புகளுக்குள் ஓடும். இவ்வாறு அவன் செல்லும் முல்லை நிலக்காட்டிடத்தே உள்ள நறிய மலருடைய முல்லை நிலம் சிறந்த கற்புடைய மெல்லிய சாயலுடைய சிறுமி உறையும் இனிய ஊராகும்.

—இடைக்காடனார்.

## 275 பாலை

இது, மகட்போக்கிய தாய் சொல்லியது.

எனது மகள், உயர்ந்ததும் ஓரிடத்தில் வைக்கப் பட்டிருப்பதுமாகிய பெரிய சாடியிடத்தே நிறைந்த நீரைச் சிறிய இறை கூடையினால் இறைத்துப் பாத்தியில் விட்டு வளர்த்த வயலைக் கொடியின் பந்தலின்கீழ் பந்தெறிந்தாடுவாள். ஆடிய இளமைத் தன்மையுடைய அந்தப் பெரிய மனைத் தலைவியைப் பார்த்து யான் வியர்வை நீரையுடையை, அதனை வெள்ளிய சாந்துப்பொடி போட்டு உலர்த்துவாய் என்று கழறுவேன். அப்பொழுது நல்ல நெற்றி யுடையவள் இனிய மழலைச் சொல் பேசுதலின்றி, இனிய உயிர்கலக்கும் வார்த்தைகளைக் கூறிப் பெரிய

சோறுடைய வீட்டின் கண்ணே என்றேடு இவ் விடதது இராள.

அவள் அயலான் ஒருவனின் காதலை நம்பித் திரண்ட அரையுடைய இருபபையின் துளையுடைய வெளளைப் பூவைக, நுட்டிகளுடைய கரடிக் கூட்டம இருநது உணணும கொடிய மலையிடத் துளள அரிய வழியே சென்ருள். பெரிய நிலம (வெப்பததால) வருநதும துனபமுடைய காட் டிடததே நேறறுபபோனவள பெரிய மடபபத்தை யுடையவளாவள. ஐதத அகனற அலகுலுக நத் தழை யைக கொய்து அழகாக உடுததலின் இலை கூழை யான நொசசியின கிழ அவள் சிவந்த சிறு விரலால வரியாககீறி விளையாடிய வணடலையுங கணடீரோ? கணணுடையவாகளே ! கயமனுர்.

## 276 மருதம

இது, தலைமகட்குப பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

ஆழநத பெரிய பொய்கையிடததே இரையை நாடி மேலே வநத ஆணவாளை மீனை உணட நாரை, தனனைப பிறர் காண்பதை அஞசி, மெலல மெலலக் காவலுடைய விட்டினுள புகும கள்வனைப்போலச் சாயநது ஒதுங்கும். இவ் வகையான துறையை உடைய ஊரனேடு உணடாகத தகுந்த நாணம இனி இருக்கினறதோ? எமது சேரியிடததே எமமைச் சேர அவன வரட்டும். செவ்வரி பரநத கண்களுடைய அவனது மனைவி, காண, அவனது மாலையையும் ஆடையையும பிடித்து ஆரியர் பெண் யானையாற் பழக் கும் பெரிய ஆண்யானைபோல எனது தோள்கள தாணைக

எனது கூந்தலிற் பிணித்து அவனது மார்பைச் சிறை கொளவேன. அவவாறு யான செயயேனுயின யான, அவாவுறறு இரந்தவர்களுககு ஈயாது ஈட்டியவனது பொருளபோலப் பரநது வெளிப்படாது வருநது வதாக, நான் ஓமபிய எனது அழகு. — பரணர்.

## 277 பாலை

**இது, தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குப் பருவங் கண்டழிந்து சொல்லியது.**

தண்ணிய கதிருடைய சந்திரன, ஒளி நீஙகச் சாய்நது ஒளி மழுஙகிய தோறறமபோல நெறறியின ஒளி மறைந்தது. இவவாருகவும கருமத்தை மேற கொணடவர் தளராத உளளத்தினராய, வேல துணையாகச் சென்ருர். அவர் சென்ற வழியிடதது மிகவும் அச்சம் தரும குரலும வாள்போனற வரியுமுடைய புலி பெரிய வாயுடைய பெண் புலியின பெரும பசியைப் (பார்த்துப்) பொறுககமாட்டாது, கரிய பனஞ் சிறுமபு போனற பருத்த மயிரும சிறிய கண்ணுமுடைய பனறி வருவதைப் பார்க்கும. இவ்வகையான வழியிடத்தில கடலபோன்ற இடத்தில பொங்குடைய மரத்தின் புகா நிற நிழலில் வழிச்செலலும் புதிய மாக்கள் களை யாறி யிருப்பர். இவ் வகையான சுரத்தை வேல துணையாகக கடந்தவர் வாராத இப்பொழுது, ஆராய்ந்தெடுதத ஆபரணமணிந்தவளே! கூரிய வாயும், அழல் எரிவதுபோனறு சிவந்த நெருங்கிய மயிரும உடைய வீட்டிலுறையும் கோழியாகிய வீரமுடைய சேவலின போர்புரிகின்ற கழுததுப் போல, பரந்து பொஙகும அழலபோனற முருககின்

விளங்கும் பூக்கொத்தை வண்டு உண்டு சிதைத்துச் சொரிந்த அழகுடைய இளவேனில் வந்தது. தோழி! நங்காதலர் வராராயினர் (இளவேனிற் காலத்து வருவரெனச் சொல்லிச் சென்ற தலைவர் இளவேனில் வந்தும் வருகிறிலர் என்றவாறு)

—கருவூர் நன்மார்பன்.

## 278 குறிஞ்சி

இது, இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

கிழக்குக் கடலிடத்து நீரைப்பருகிய நிறைந்த வானம், முரசுடைய வேந்தரின் பல படையுடைய சேனையின் பரிசை நிறம் போன்றனவாகி வலமாக மேலே எழும் எழுந்து கோலிட்டதே கட்டிய கொடிபோல வளையும்படி மின்னும்; மின்னி நடு இரவில், அதிரும் ஓசையுடன் இடி இடித்துப் பெரிய மலைமீது சூழ்ந்திருந்து மழை பெய்யும் அதனாற் பெருகிய ஒளிவிடும் அருவி பரந்து, நாளை, பெரிய மூங்கிற் கோல்கள் முறியும்படி திண்டி அழகிய குதிரை வருவதுபோல நமது ஊரிடத்துள்ள பெரிய அகன்ற முன் துறையிடத்து வரும். மணி போன்ற உடம்பின் ஆயத்தாரால் அலங்கரிக்கப்பட்ட அழகு தொலையத் தாங்குதற்கரிய நோயைச் செய்த வனது அழகிய மலையினின்றும் வருகின்ற அந் நீரிடத்தே பவளமணியைப்போலக் குளிர்ந்த கண்கள் சிவப்படையும்படி மதத்தியானைப் பொழுதில் மிக்க துயர் நீங்க முழுகுவோம்.

—கபிலர்.

## 279 பாலை

இது, பொருள் வயிற்பிரிந்து போகா நின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

நண்பர்களது வறுமையையும், உறவினரின துன்பத்தையும பறறு வாழ்பவாகளது செல்வததை யுங கணடு ஓா ஊரிடததில் வாழ்தல கூடாது, பொன போனறு விளஙகும அழகு தேமலோடு நெருங்கி விம்மிய மிருதுவான முலைகளின் இடத்தை நீங்காத வருக்கு. இவவாறு, நடு இரவிலும் பகலிலும நினைந்து நினைந்து எனது நெஞ்சைச, சுடும கூரிய எரியாகிய ஆளவினை மறைததது. யாம மேறகொணட முயறசி மாரியைபபோல் நீங்காது. தினமும காட்டிடத்தில நடநது யான இவ்வாறு துனபுற அவள துன்பப் பட்டுளத்தன்மையளாகுவளோ? இனிய யாழ நரம் பிடத்துப பிறககும விளரி ஓசையோடு, பூங்கொத்துக களைக் கோதி மகிழநது கூவுகின்ற குயிலோசையும் சோநது உறக்கத்தை எழுப்புகினற நீர் தெளிநதிருக் கினற காலை நேரததில நமமை நினைக்கின்றவளாகி, அழகாக நடக்கும அன்னப் பேடையினும மெலலென நடககும. கரிய நெய்தத கூந்தலுடைய மாயததைச் செயபவள் துனபமடைவாள்.

—இருங்கோன் ஒல்லை ஆயன் செங்கண்ணனார்.

## 280 நெய்தல்

இது, தலைமகளைக் களவுற்று நீங்குந் தலைமகன் தனனெஞ்சிறகுச் சொல்லியது.

பொன நெருஙகினறபோன்ற விளங்கும பூங் கொத்துடையதாயிருக்கும செருநதிரமரம. அம் மலரை வேய்ந்த அழகிய கூந்தலையுடையவள மணல் உயர்ந்த கடறகரையிடததே நணடை ஆட்டி உலாவி விளையாடி இருபபாள இவவகையான அழகிய வளை

யணிந்த சிறுமி அழகாற சிறந்த பொருளைக் கூடை நிறையக கொடுத்தாலும் பெறுத்தற்கரிய பெருமை யுடையவள. அவ் வாறாயின, த நம வழியை அறிநது, நாம் உறைகின்ற தேயததின் பககததே சென்று (அவள் தந்தையோடு) பெரிய நீருடைய கடற கரை உபபோடு உழுதுட, பெரிய நீருடைய கடலிடததே கட்டுமரததோடு சென்றும ஏவல புரிந்து பணிந்து அடுத்து இருபபின அவன அவளைத தருவானோ? அவள பரந்த திரைதரும கணதிரணட முததுக்களைக கொண்டுவநது வண்டு ஒலிககின்ற கடறகரைப பககத்தே பஙகிடுகின்ற கடறகரைச சோலையுடைய பெரிய துறையுடைய பரதவாமகளாவள.

—அம்மூவனார்.

## 281 பாலை

இது, தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றுளாய் தோழிக்குத் தலைமகள சொலலியது.

தோழி! தினமும பெரிய ஆணைகளை யான் அச்சந தருமபடி கூறி, தான் கூறிய சொறபிழைககும் என்பதையும அஞ்சாது காதலர் சென்றூர். ஒடுங கிய அழகிய இளைய மயில போட்ட இறகை வானத் தைப் பிளககின்ற விலலிடததே சுற்றி, அவ்வலிய விலலின் அழகிய நாணின் விளிமபிலே ஏறறிய கணைக்குங குரலுடன விரைவிற செலலும் கடிய கணை யால் வலிமையடைந்தவர்களாவா வடுகர். இவர்கள முன்னே செலல மோரியர் தெறறுத திசையில வர வெணணிய வரவிறகு, வானை முட்டும்படி உயர்நத பனிபடிகின்ற உயர்ந்த மலையைக கடததறகு தேரின் விளங்குகின்ற சிலலு உருளும பொருட்டு வெட்டிப்

பதித்த பாறையைக் கடநதார்; பறை குறைந்தது போனற அலரை நமககுத தீர்ததுச செனறார். செய வது அறிநது கூறுவாய தோழி! —மாமூலனார்.

## 282 குறிஞ்சி

**இது, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச சொல்லுவாளாய்ச் சொல்லியது.**

பெரிய மலைசசாரலிலே வேட்டைக்குப போன செறிந்த மூட்டு வாயுடைய அமபும வலிய விலலு முடைய குறவன, தான வேட்டையாடிக் கொனற யானையின் வெள்ளிய கொமபைக் கொணடு நீர் விளஙகுகினற சாரலிடை நலல பொன்னை அகழ்வான. கண்ணைபபோனறு இமைககின்ற வலிய வயிரமணி விளங்குமபடி (அதிற பட்டுக) கூரிய நுனியுடைய வெளளிய கொமபு ஒடியும. அதனால் கொமபி னின்றும், தெளிந்த நீருடைய ஆலாங்கட்டிபோன்ற முததது உதிரும். இவ்வாறு பெற்ற மூன்று வகைத திரவியங்களையும விலைகூறிச் சந்தனத தடி யைக காவு மரமாகச் சுமந்துகொண்டு தேன ஒழுகும் வேங்கைப் பூமாலையை அணிந்து செல்வான். இவ் வகையான நாட்டை யுடையவனுககு மிக இனிய பலாவின பெரிய செலவததையுடைய எஙகள தந்தையும் மகட்கொடுகக இயைந்தனன். அலர் தூற்றும் வாயுடைய இவ் வூரவர்களும அவன் மணத்தலும வாயடங்குவாாகள. சாயந்த இறை யுடைய திரணட தோள்களைக கொண்டாடி ஆயும் அவனுக்கே கொடுப்பதாகக் கூறினாள். நாமும் மணக்கும நாள் விரைவில் வருவதாக எனறு அழ

கிய இறையுடைய மெல்லிய விரல்களைக் குவித்து வீட்டில உறையும் கடவுளுக்குப் பலி இடுவேமாக

— தொல்கபிலன்.

## 283 பாலை

இது, உடன்போககு வலிந்த தோழி நலைமகற்குச் சொல்லியது.

தலைவர், அழகிய நீணட கூந்தலையும் பெரிய தோளகளையும தடவி உனனை இவவிடத்தில விட்டுப பிரிய அஞசினர். அப்படியிருந்தும உனனுடன செலலுதறகுத துணிந்த பெரிய விருப்பம மிகுநதார். கவாபட்ட கொமபுடை முதியமானைக கொனறு அறப உணவைக கொணட சிறாரிடத்திலுளள பெணகள செலலுமிடஙகளில தூரததே இருநது கூகை குழறும. துன்பந்தரும அம மெலலிய குரல ஐதாக வநது கேட்குந்தோறும் வழிச் செலவோர் வருநதுவர். இவ் வகையான வழி போதறகரியதாகும். அவ்வழி இவ்வாறிராமல, கரிய மரஙகளிடததே தழைதத இளந் தழை அடியிலிருநது வளர்ந்து அழகு பெறறு, வானமளாவி இருண்டு, வெப பந்தீர, பசிய வானத்தே பாய்கின்ற மழைத்துளி விழுநததைப்போல மெல்லிய குருத்துவிட, நலல பெரிய காட்டிடததே, (காலுககு) ஊட்டுகினற செம பஞ்சின சிமபு பறந்தாறபோலத் தம்பலப் பூசசி குளிர்ந்த நிலத்தே வரியாகக் கிடகக, குளிர்ந்து இனிமையாயிருபபதாக, எனககு இனிமையிலலாத பிரிவினகண உன்னோடு அவர் செலலுதறகு.

—மதுரை மருதனிள நாகனார்.

## 284 முல்லை

**இது, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.**

சிறிய நெல்லியினது காயைக் கண்டதுபோன்ற குறுகிய விழியும், கூரிய பார்வையுமுடைய குறுமுயல் விளைந்த வரகினது வீங்கிய பொதத்தினை அருந்தும். அருந்திக் குவிந்த செவியுடையன வாய் வளைந்த கொடிகளுள் ஒடுங்கியிருந்து நித்திரை கொள்ளும். கொண்டபின் நித்திரை எழுந்து தன் துணையோடு போகும். போய் சிறுகுடி யிடத்துள்ள முற்றத்தே சிறிது நிறைந்திருக்கும் நீரைக்கண்டு உண்ணும். இவ் வகையான புலலிய நிலத்தே உள்ள சிறுகுடியில் **தினையினாற் சமைத்த கள்ளை** யுண்ட வீரா வளைத்த வில்லராய வேட்டையாடச் செல்வர். சென்று முல்லை நிலக்காட்டில் மானை (வேட்டை யாடி அதனிறைச் சியை) அறுத்து உண்பர். இவ்வாறு அழகிய முல்லை நிலக்காட்டிடத்தது எம்மினும் பார்க்க காமத்தால் மடங்கிய அழகிய மாமை நிறமுடைய தலைவி உறையும் ஊர் —**இடைக்காடனார்.**

## 285 பாலை

**இது, உடன்போக்கு உடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொல்லியது.**

நம்மைப் பிரிந்து செல்லும் நீ, செல்லாயென்று மிக்க துயரால் வருந்தும் துயராகிய மன வருத்தம் ஓடித் தூரத்தே அகலும்படி தோழி! பல முறை ஒரு வரை ஒருவர் தழுவிக் கொள்ளுவோம்வாராய்.

கூரிய பல்லுடையதும் ஊனில் விருப்புள்ளது மாகிய பெட்டை நாயின் மிக்க பசியைப் போக்குதற் குக் காட்டிற சஞ்சரிக்கும் இளைய பெண்மான அல

றுமபடி கலைமானின் ஓடுகின்ற தொடையை அறுத்த செந்நாயக் கடுவன் வெய்யிலுக்கு வருந்தி இளைக்கும் வெப்பமுடையதாயிருக்கும், அரிய சுரம். அவ் விடத்தே வரிவுடைய பெரிய வேங்கைப் புலியின் வயிரிய தோலபோன்ற, கறைகள் பட்டுககிழிந்த பல கிழிவுடைய உடையும கிழிந்த குடையு முடைய புதிய மாககள், உயர்ந்த மரத்திலேறி, இடியேறறை விருமபி மேலே எழுந்த, கூட்டததினின்றும பிரிந்த எருவையின ஆடுகின்ற செவியைப பார்ப்பா. இவ் வகையான காட்டு வழியே, பெருதத தோளும், குவளை மலாபோன்ற கணணும உடைய இவள் நம் மோடு வநவா என்று சொன்னார், உனது காதலா.

—காவிரிப்பூம் பட்டினத்துக் காவிரிக் கண்ணனார்.

## 286 மருதம்

வரைந்து செலவேன என்று நீ பதந்த தலமகன தலைமகளை ஆற்று வித்துக் கொண்டிருத்தல வேண்டுமெனத் தோழியின் கையைப்பற்றிக் கூறினன், கையைபபற்றியது தன்னைபபற்றிச் சூளுறறதாகக் கருதித் தோழி சொலலுகின்றுள

வெள்ளிய அழகிய பூண் பூண்ட, மெலலிய கரும் புலக்கையால, வள்ளிக்கொடிபோன்ற நுணணிய இடை அங்கும் இங்கும் அசைய, மீன சினைபோன்ற வெள்ளிய மணலைக குவித்து காஞசி மர நிழலில் நின்று தம சுறறததவரின புகழைப் பாடுவார்கள், ஊரிடததுள்ள சிறுமியர். இவர்கள செல்லும் குறுகிய வழியிடத்தே, வரால் மீனைத் தின்ற மீன்கொத்திப் பறவை தாழ்ந்த கிளையிடததே உறங்குகின்ற மருது நிறகும். இவ வகையான குளிர்ந்த துறையையுடைய

ஊரனே ! எப்பொழுதும விரும்பாத உள்ளம் ஒன்றை விரும்பினாலும், கேள்வி அறிவை அங்குசமாகக் கொண்டு அவ்விருப்பை அடக்கி, அறமும் பொருளும குறைவுபடாது ஆராய்ந்து, தனது தகுதியையும் பார்த்து, அதன்பின நினைதததை முடித்தல பெரியோா ஒழுக்கமாகும் ஆராயுமிடத்து இவ்வகையினது பெரியோரின் ஒழுக்கமாதலான, உம்மைப்போன்றவர்களிடததும இவ்வகையான பொய்யோடு கலந்தவை தோனறின உலகத்தில மெயயென்பது எங்குள்ளது.

—ஓரம்போகியார்

## 287 பாலை

இது, பிரிந்துபோகினற தலைவன இடைசசுரத்து நின்று தன்னெஞ்சிற்குச் சொல்லியது

இரஙகத்தக்க அவள, வளையணிந்த முனகைகளின் கூட்டமாகிய விரலகளைக குவித்து, (எனது) வடிவததை நினைகின்ற நெஞசளாய, பொழுதையே துணையாகக்கொண்டு வருந்தியிருப்பாள. தூங்குகின்ற நிலைமையையுடைய ஆணமான சொறிதேய்தத பெரிய அடியுடைய சந்தன மரத்திலே சுரைகொடி படர்கினற பொதியமலையிலே, அழகிய சிறிய குடில வீடுகளுடைய சிறிய ஊர் இருககும். அவ்விடததே விடியற்காலையில் இடும் பலியை மறந்த பலிபீடததின் பெரிய சுவரை மறைத்து ஒரு பெரிய விழுது விழுந்திருக்கும். அதனை உதைக்கின்ற கோடைக்காற்று துணையோடு கூடியிருக்கும் புறாவை ஓடச்செயயும். வெள்ளிய முகிலுடை பெரிய இடத்தில திரணட காலுடை அழகிய பெண் மான, கலைமானின் பககத்தை நக்கி, ஒடுங்கி நிற்கும் யாமரத்தின் உயர்ந்த கிளையின் ஒடுஙகிய ஐதரி

மூல அசைவதைப் பார்க்கும், மாலைக் காலத்தேயாம் இவ் வகையான நீண்ட வழியிடத்தே வருந்துகின் ரோம். (காதலி பகல துணையாக வருந்த நாம மாலைக் காலத்தே நீண்ட வழியிடத்தோம் எனக கூட்டுக).

—குடவாயிற் கீரத்தனார்.

## 288 குறிஞ்சி

இது, பகற்குறிககண் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாவியது

சந்தனம பூசிய அழகிய பெரிய மார்பினையுடைய வனே! உனது மனம் மகிழுமாறு உனது மலைக் குச் செலவாயாக. மலைசசாரலிடத்தே வேங்கையின பெரிய சினையின புதிய பூவாற்கட்டிய அழகிய கண ணியை முருகனோடு மாறுபட அணிநதவனே! நெருப் புதநின்ற கொலலையிடததே விளைந்து கதிர்வணஙகிய தினை எமககு வரும துனபத்தை அறிவிததது (தினை யறுப்பின தலைவன புனத்திடத்துத் தலைப்படுதல அரிது), தினமும வருகின்றவனே! கனிகள் முதிாநத மலைபபாறை யிடத்தே எமது தனிமையைக கண்டும் (வாளாவிருபபையாயின்) எம்மை எளிமை செய் தனையாகுவை. கொடியவர்கள வநது கிட்டும் உயர்ந்த பெரிய மலையிடதது, செங்குத்தாக விழுந்து ஒலிககும விளங்கும் நீருடைய அருவி இழியும். இவ் வாறு ஆறு செலகினற அச்சந்தரும் தூறிடத்துச் சிறிய தலையுடைய குரங்குக் குட்டியின் பசியைக் களையும்பொருட்டு அதன் தநதை பலாபபழச் சுளை யைத் தொட்டாலும் மிகவும வருத்தமுண்டாகுமபடி குளிர் மிகுந்திருக்கும். இவ் வகையான பக்க மலை யிடத்து மாஙகாட்டை மகளிர் காவல் காப்பதை

ஒக்கும், பூங்கொத்தோடு குலைந்த கூந்தலையும் அழகிய இனிய வார்த்தையுமுடையவளது தந்தை அவளைக் காக்கும் காப்பாகும்.

—விற்றூற்று மூதெயினனார்.

## 289 பாலை

இது பிரிந்துபோகா நின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது

வில்லில் ஏற்றிவிட்ட கணை பட்டு இறந்த புதிய மாக்களை இட்டுமூடிய கற்குவியலிடத்துப் படர்ந்த வழியிடத்துள்ள காட்டு மல்லிகையின் பூவை உயர்ந்து நிற்கும் நடுகல்லுக்கு நாட்பலியாக வைப்பர் (வழிச்செல்வோர்). இவ்வகையான சுரவழியின் குறுக்கே கிடக்கும் மரங்கள் உயர்ந்த வழியிடத்தே கருமம் வலித்தலில் நாம் வந்தேம். எம்மோடு வந்து நீ எப்போதும் வருந்துதல் அமையாது. நெகிழாது தழுவிய பெரிய கை சிறிது நெகிழினும் வருந்தும் இயல்புடையள் இளமையுடைய என் காதலி. யான் தூரத்தே செல்லுதலும் அவள் வருந்தித் தினமும் கீறிய வலிய சுவரை நோக்கி என்னை நினைந்து கண்ணிடத்தே நீர் கொள்வாள்; கொண்டு நூலிலிருந்தும் நெகிழ்ந்த முத்தைப்போல முகிழ்த்த கண்ணீர்த் திவலை தெறிக்கக் குற்றந்தீர விரித்த மெத்தையுடைய படுக்கையிடத்தே, ஐத மென்மையான தூவி அணை மீது சாய்ந்து மயக்கங்கொண்ட மனத்தளாய்ச் சோர்ந்திருப்பாள்; அவள் பிளந்த வாயுடைய பல்லி சொல்லுந்தோறும் கடவுளைத் துதித்து நல்லவற்றைக் கூறின் நடுங்கிப் புலலென்னும் மாலைப்பொழுதோடு வெறுத்து இருப்பாள்.

—எயினந்தைமகனிளங்கீரனார்.

## 290 நெய்தல்

**இது, இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது**

*கரிய மிக்க சேறுடைய வயலிடத்தே விடியற் காலையிற சென்ற, கொழுத்த மீனை உணவாகவுடைய புலவிய தலையுடைய சிறுவரின நுண்ணிய கயிறுருற் பின்னிய அழகிய வலையில சூடுமியுடைய கொக்கின் பசிய காலுடைய பேடு பட்டதாக, அதன சேவல் பொழுது படும நேரத்தில மிருதுவான இரையைத் தினறுது சிறியகுஞசைத் தழுவிககொண்டு விரைவாக அப்பனையிடத்தே அனபுடன அசையும். இவ்வகை யானசிறிய பலபழைய குடிகளையுடைய, கடறகரைத் தலைவன, கழியின் பககததே நிறகும புன்னைப் பூக்கள் சொரிந்த சோலையிடததுப பிரியாத நெஞசத்தோடு தனியனாய் வந்து எனனை மணந்தான. அவன் மண வாதமுனனும், வெள்ளிய கொமபுடைய யானையும், வெறறிப் போருமுடைய குட்டுவனது தெளிந்த திரை யுடைய கரையிடத்துள்ள* **தொண்டியின்** *முன துறை யிடதது, வண்டு உணண மலர்நத பெரிய குளிாநத நெய்தல் மணி போனற பெரிய வடிவு நீங்கிப பொன் னைப் போன்ற நிறத்தைக் கொணடது. இது எதனாலோ? தோழி!*

**—நக்கீரர்.**

## 291 பாலை

**இது, பொருள் வயிற் போகநின்ற தலைமகன் இடைச் சுரத்துத் தன் னெஞசிறகுச சொல்லியது.**

*வானம பெய்யாமையினாலை காடு காய்ந்து மரங் கள் இலை இல்லாவாயின. ஏறுகளையுடைய பசுக்*

கூட்டங்களைப் பசி வருத்தினது. இவ்வாறு நீர் நிலைகள் முற்றுய வறணட வேனிறகாலததோடு பயன எதுவும இலலாத பெரிய மலை உயர்ந்து நின்றது. அதன பககததே புலியோடு போாசெய்து கோபமமிகுந்த வலியோடு வலிய ஆண யானை ஒதுஙகி நிற்கும. அப் பககத்தே பரிய பரற கறகள சிறிய பல மின மினிப பூசசிகளபோல எலலாப் பககஙகளிலும நிறைய விட்டு விளஙகும. இவ வகையான தொலையாத வழியிடதது எருவைப பறவை, தனது பெரிய சிறகினுல், விரிநத பூஙகொததுகளில தாதை உண ணும தும்பிகளை ஓட்டும். அததும்பிகளின ஊதுகினற ஓசையைப்போல வேகமாக மூசசெறியும அமபையுடைய (ஆறலைப போா) அசசந தருமபடி தழை சூடிய தலையினராயக கவர்பட்ட வழிகளில நினறு ஆரவாரஞ செய்து சாததரின அரிய பொருளைக கவர்வர். அதனுல் அவ்வழியால் சாத்தர் எவரும் செலலமாட்டார் இவ் வகையான உயர்ந்த வழியிடததே சிறிய இலையுடைய நெலலியின இனிய சுவையுடைய திரணட காய் உதிர்ந்து பரந்து கிடக கும. புள்ளியுடைய பெண் மான் அவைகளை உணண விருமபி அவ்விடத்தை விட்டு நீஙகாது, அறுத்துச் செயததுபோனற ஊட்டுக கொமபைப் போட்ட தலையிடத்தில் முளைககினற தோலுடைய கொமபு அதிரும்படி நினறு (துணையைக) கூவி அழைககும். அழைதது வெய்யில சுடுதலின வருந தும. இவ் வகையான அரிய சுரததைக் கடநது அவ விடத்திருந்தும் நினைக்கினற நெஞசே! கேள. பூவைப் போல இடத்தே பரநது நாறுகினற கரிய செறிந்த

கூந்தலும், நலல அழகிய குளிர்ந்த கணகளுமுடைய காதலியின் மெல்லிய இறைகளுடைய பெரிய தோள் கள் பெரிய அழகோடு விளங்கும.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

## 292 குறிஞ்சி

இது, வெறியச்சுறி இத் தலைமகள் தோழிகுச் சொல்லியது

இராக்காலத்தே மேயச செலலும யானை யின காலடிச சததததைக கேட்ட நடு இரவில், மலையிடத்தே பரணிற காவலிருககும வலிய கையையுடைய கானவன கடுகிய விசையுடைய கவணிடத்து வைத்தெறிந்த சிறிய கல், நாணில் நினறு புறப்பட்ட கணைபோலச் சென்று மலைச் சாரலிடத்துளள வேங்கையின் பூங்கொத்துகளைச் சிதறித், தேன் ஒழுகும்படி பலாப்பழத் துட்டங்கும். இவவகையான மலைநாடடை யுடையா எமது தலை வர். அவளை மணவாவிடடில, அவர் விளங்குகின்ற வளைகளை நெகிழச் செய்த துன்பபபத்தை அன்னை அறிந்து, பலியைச் சொரிந்து, அசைகினற மெல்லிய தளிருடைய சிறிய இலையை அருந்துகின்ற தாயின் முலையைப் பெறுது அதன குட்டியைக கொலலுதல் வேணடி வெறியாடும் படிமத்தான மாலை அசைய ஆடுவாளுயின், அதனை நான நாணுவேன். தோழி! வேறு செய்யத் தக்கதை அறிந்து கூறுவாய்.

—கபிலர்.

## 293 பாலை

இது, பொருள் வயிற் பிரியக் கருதிய தலைமகன் குறிப்பறிநது தலை மகள் தோழிக்குச சொல்லியது

இலை ஒழிந்து வாடிய புல்லிய தலையுடைய வேல மரத்தின் கிளைகளில வலையைகசட்டினதுபோலச சிலமபியின வலைகள பல சூழ்ந்திருககும. இபபாழான இடத்தே, ஆடை நெய்தறகுப பா விரிதததுபோனற வெயயில விளங்கி, அசைகின்ற அவ் வேலமரம் தோன்றும. இக கொடிய சாட்டிடத்தே வேலமரங் களில குயிறகண போனற நிறமுடைய காய முறறி மணி ஆபரணமபோனறவும மானின் நிறமுடையவு மாகிய கனிகளாகும. உதிர்ககாத அவறறை மெல்லிய கிளைகள உதிர்க்கும் கொடியவெப்பமுடைய சுரத் தைதத தமியராகக கடநது செலவாா எனறு கூறுவார். தோழி! யாமோ நறகுணமில்லாத இடையர் தாயைப் பிரிததுக கட்டிவைதத மனம வருநதுகினற கனறு போல நொநது நொந்து இனிமை யில்லாத வறறைக் கூறுவேம. எனது காதலா என்ன மயக்கமடைந் தாரோ? —காவன் முல்லைப் பூதனர்.

## 294 முல்லை

**இது, பருவ வரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

இருணட கரியமுகிலகள் விண அதிரும்படி முழங் கிப் பெரிய மழை பெய்தது. மழை பெயதபின் புகைபோன்று தோன்ற புள்ளியுடைய நுண்ணிய தூறல் பூமிப்பரபபு நிறையத தூறினது. அப்போது காதலரைப்பிரிந்த வருத்த மெய்திய பெணகளின் நீர் வடிகின்ற கண்களைப்போலக கருவிளை மலர்ந்தது. பஞ்சு போன்றதலையுடைய பூவுடைய, புதரிடத்தில நிற்கும் இண்டங்கொடி நெய் தோயந்ததுபோன்ற

நீர் நனைந்த அழகிய தளிர், இருபிளவுடையதாயும், கறுத்தும நீருடையதாயும அசையும. அவரை களிடத்தே பசிய பூககள் பூததன. அகனற வயல களிடத்திலகதிர் நீண்ட, காய்களையுடைய நெல், கண்ணுககினிதாக வளைந்து நின்றன. பனித்துளி மரக்கிளைகளிடத்திற றூஙகும முனபனிகாலத்து நடு யாமததே காயகினற கோபமுடைய அரசனின் பாசறையிடத்தே நீளததாமதிதது நமது நோயை அறியாத அறனிலலாதவா, எனது (வருநதுவதாகிய) இந நிலைமையைக களையவருவாரோ? தோழி! பெரிதும அடிக்கினற வாடையோடு, எனது தனிமை யால யான நோவேன.

—கழார்க்கீரனெயிற்றியார்.

## 295 பாலை

இது, பிரிவிடை வேறுபட்ட தலைமகடகுத் தோழி சொல்லியது

நிலம நீர் வறணடு பெரி சுனை வறறவும மலையின் குன்று வெடிக்கவும் கடிய வெயில காயும. இத ருல் வெய்யில நீடிய, மூங்கில் வளரும காட்டிடதது, வெள்ளிய மருப்பிடத்துப் பெரிய துமபிககையை வைதத, வேஙகையைவென்ற அஞசந்தரும் பெரிய கழுத்துடைய உயர்ந்த யானை, சோர்நது மதம வாடிப் பல மரஙகளுடைய ஒரு இடததே பெண யானை யோடு தஙகும. இவ்வாருன கல்லுடைய காட்டைக் கடந்து தலைவர் சென்ருர். அக்காட்டிடத்தே கடல். நீரிடத்து விளைந்த உப்பைக கொணடு செல்லும் கூட்டமாகிய உமணர், வருந்துகினற எருதுகள் மூச் செறியும படி செல்வர். சென்று மேட்டு நிலத்தை

இடித்து அகன்ற இடத்துப் பெரிய வாயுடைய கூவ லைததோணடுவர். அககூவல வழியிடத்தே செல லும புதிய மாககள் உணடு களைபபாறுமபடி ஊறும். இவ் வகையான, பக்கததே அசைந்து ஒலிககினற வீரக்கழலணிந்த புல்லியின் மலையிடத்துச செலலுதற் கரிய காடடை மறிதது, வலிய விலலும், நீணட அ ம பு ம, சுறுசுறுப்புமுடைய வடுகர், கள உணடு மகிழ்ந்தவர்களாய் ஆரவாரஞ செயவார்கள் நங்காத லா (காவலுடைய) காட்டைத தாணடி, இவ் வகை யான மொழி வேறுபட்ட தேயத்தைக கடநதன ராயினும அழகு நிலைபெறற விசாலிந்த நின்மிருது வான பழிதீர்நத பெரிய அழகைத் தருவர் தோழி! மாரிகாலததுச் சிறு செண்பகத்தின் குளிர்நத இதழ போன்ற அழகிய கணணீர் கொண்ட சிவநத கடைக கணணும் மணஙகமழுகின்ற ஐந்து வகையாகிக கோதி முடிநத கூந்தலும உடைய பெணணே! (பெணணே! காட்டைக் கடந்து மொழி பெயர் தேயததே சென்றவர், தோளகளின் மாண் நலம் தருகுவர் எனச்சேர்த்துக் கொள்க.) —மாமூலனர்

## 296 மருதம்

**இது, வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்கு வாயின மறுக்குந் தோழி சொல்லியது**

மாலைபோன்ற பூங்கொததுகளுடைய குறிய காலுடைய காஞ்சியின் மலாநத பூமாலையை அணிந்த கூந்தலும், செவ்வரி பரந்த மதர்த்த கணணுமுடைய மாயத்தைச செய்யும பரத்தையோடு நேறறும மணங் கமழும சோலையிடத்தில உறஙகி இன்னும் பெரிய

நீருடைய வையை ஆற்றில் அவளோடு புனலாடிஈரம் புலராத மார்பினையாய் எம்மிடத்தில் வந்து நிறகின்ருய்! நினறு அதனை நீ எனககு மறைக்கமுடியுமோ? கடலிடத்தே பல மீன்களைப் பிடிப்பவர், தாம் வாரிக் கொணடு வந்த இப்பியைப் பன்றுடையால் அரிக்கப் படும் மகிழ்ச்சியைததரும களளுக்கு விலையாக் கொடுப் பர். இவ் வகையான பெரிய புகழுடைய கொற்கை அரசனும, வெற்றி வேலும, வேகமுடைய வலிய யானையும், நெடுந்தேருமுடைய பாண்டியனது மலைபோன்ற உயர்ந்த நெடிய கோபுரங்களையுடைய மதுரையிடத்து எழும் பெரிய ஆரவாரம் போல, நீ பரத்தையோடு நீராடியது, பலர் அறியப் பெரிய அலராகினறது. —மதுரைப் பேராலவாயார்.

## 297 பாலை

இது, பொருள் வயிற் போகா நினற தலைமகன தனனெஞ்சிற்குச் சொல்லியது

பெரிதும அழகிலலாத பெரிய புலவிய தாடியும, கொடிய கண்ணுமுடைய வெட்சி வீரகின அம்பு கொல்லுதலின் பக்கம் ஒடுஙகிய மிக அச்சந்தரும் நடுகற்கள் நாட்டபபட்டிருக்கும. அவைகளிடத்து அவர்கள் புகழ் பரநது தோன்றும்படி குயிலெழுத்துப் பொறிக்கபபட்டிருக்கும். இவை கிடக்கின்ற மலையிடத்தே செலலாது புதிய மாக்கள களையோடு செல்லும தெய்வம் உறைகின்ற ஓடைமரக் காட்டைக் கடந்து செல்வர். அக்காட்டிடத்தே பசிய முள்வேலியுடைய புலால நாறும முறறத்தில, சிததிரித்தது போன்ற, காட்டுப்பூனையின், பூளைபோலப் பெரிய

மயிருடைய பல குட்டிகள் சந்திரனைச சூழ்ந்த நட் சத்திரங்கள் போலத தாயைச சுற்றிப படுத்திருக்கும். இவ்வகையான பாலை நிலத்தூரிடதது எயினர் நிரை கவருமபொருட்டுக் கொட்டும மேள வோசையைக் கேட்டு எருவைச் சேவல பெரிய சிறகை அடிததுப பறககும. இவ்வகையான அஞ்சத்தக்க காட்டிடத்தே நமமோடு வருவேனென்றவளது கணகள, நடுச் சாமத்திலும, பெரிய புலலிய மாலையிலும தாங்கமுடி யாத நோயோடு மிக்க துயராற் கலங்கி, எம்மை நினையும் வருத்தம கைகடததலின் என்ன ஆகுமோ? நெஞ்சே !

—மதுரை மருதனிளநாகனார்.

## 298 குறிஞ்சி

இது, இரவுக்குறி கட்டலை மகற்குத் தலைமகள சொலலியது.

நீரைப்போன்று நிறமுடைய அழகும், பல கதிர் களுமுடைய சூரியன, விளங்குகின்ற தொழிலைச் செய் வதற்கு வலமாக உயர்ந்து எழுந்து நிறைந்த கட லிடத்தே தோன்றும அதுபோல இருணட மாலைக் காலத்தே வேங்கை நிறைய மலர்நதிருக்கும. அதன் ஒள்ளிய தளிர்கள விளங்கும் தழைத்த பெரிய கிளை யிடத்துள்ள குளிர்ந்த துளியை அசைகின்ற காற்றுத் தடவும. இவ்வகையான மலை நாடனே! பெரிய ஆண் யானை (புலியைக்) கொன்று சினம அடங்கா தும், வென்றதனால் வலி குறையாதும், பெரிய பெண் யானைக் கூட்டங்கள தடுமாறுதும, பெரிதும ஒழுகு கின்ற மதத்தினால செருக்கியும பெரிய மலையிடத்தே அழகாக வரும். இவ்வகையான பெரிய காட்டு வழி

யில செறிந்த இருள்கெட வெள்ளிய வேலை ஏந்தித், தாழ்ந்த மாலையிடதது ஊதுகின்ற வணடுகள் இருந்து மலாகளின் முறுக்கை அவிழககினற நடு இரவில இவ் விடம நீ வநதது மிகவும் இனிதாகும் துளியுடைய கள்ளை மிகவுடைய எனது தந்தையின பெரிய மனை யில தனனைப பாதுகாககும் ஆய் அறிதலை அருசி நடு இரவில காவலையுடை நெருசோடு காமத்தைச செபபி நின கொடுமைகளைக கூறினேன. கூறுதலும அவள் இததன்மையாக வருந்தாதே. தோழி! கேள! எம் மைத துறந்தவர் நெடுநேரம பிரியாதவராகி விரை வில் வருவாரென, இரவில துயரே துணையாகத் தூஙகாது உறைகினற இவள மகிழநதாள.

—மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனுர்.

## 299 பாலை

இது, இடைச்சுரத்துப் போகா நின்ற தலை மகன நனனெஞ்சிற்குச சொலலியது.

இரவும பகலும் கருமததின பொருட்டுப பிரிந் தோம். மனம் நினைத்துச் சென்று அடைய விருமபிய ஊரை மறந்து உறைய வலலேமாயினேம ; அவவா றுயினும அப்பதியை மறந்து இருததல் அரிதா கின்றது. கடுங்காறறு எடுததலின அதன வழிப் பட்ட தேககிலை, நெடிய சிமகளையோசை செய் கினற பருந்தின நிரை எழுமபியது போல வானம் மறையப பரநது பறககும. பறந்து பல பணடங் களோடு அகனற இடததே செலவோர் மயங்குமபடி பறந்து கவர்பட்ட வழியை மறைக்கும. இவவகை யான காட்டிடததுள்ள வழியிடத்தே நான் வினை

வயிற செல்வேனென்று நான உரைத்தபோது, படு கின்ற சந்திரனைப்போலச் சோர்ந்து, வருந்துகின்ற துன்பத்தோடு புதிய அழகு இழந்த அழகிய முகத் தைக் கவிழ்ந்து நிலததை விரலாற் கிளைந்தாள். கிளைந்து கண்ணீா வடிகின்ற ஈரமான குளிர்ந்த கணை கள் சொரியும் குளிர்ந்த நீர் நெஞ்சிடததே பட, நிறகமாட்டாது, மிகக துயராறகலங்கி, நா நடுகக முற்றுப் பேச மாட்டாதவளாய், கருமணல போனற கூநதலில மறைந்தாள். நீர்செலலும கருமம் மாட்சி மைப பட்டு நன்மையாகட்டும என்று சொலலி நெடுமூச்சு விட்டாள. இவ்வாறு வருநதுகின்ற நோயோடு வருந்திய பெரிய விருப்ப முடையவளது துனபமுறும் நிலை இவ்வாறிருநதது.

—எயினந்தை மகனாரிளங்கீரனார்.

## 300 நெய்தல்

இது, பகற்குறிவந்து நீங்குந தலைமகற்குத் தோழி சொல்லியது.

விடியற காலையில் வலையை வீசிப மீன் பிடித்த வில் வலல பரதவர், பறியிடத்தே அம்மீனகளை நிறையக் கொணடவர்களாய், அவைகளை மணல் செறிந்த கடற்கரையில் வருந்துமபடி காயப்போடு வர். அம்மீன்களை உணட பட்சி பெரிய துறையிடத் துள்ள சோலையில இருக்கும். அசசோலை யிடததே பகலைக்கழித்துச செலலுதறகுத் தோழுட்டுமிடத்து, நீ வரிசையாகக கிடககும அழகிய செறிந்த கைவளை களைத் திருத்திக் குழம்பிய கூந்தலைததடவி,பெணணே! நீ இனி உனது தோழிமாரோடு வீட்டுக்குச் செலவா யாக என்று சொன்னாய. அப்பொழுது அவள் பெரிதும்

அழுது தாஙக மாட்டாமல் வருத்த மடைந்தாள். அய லவரைபபோலப் பிரிந்து சென்ருல் அவள் விரைவில் இறப்பினும இறப்பாள் எனறு அஞ்சுவேன். ஆகவே தொலேவிடதது இருந்து வருகினற (புதியவர்களேப் போல) நீர் பெரிய ஆரவார முடையதும் புதுவருவா யுடையதுமாகிய எமது சிறுகுடி யிடத்தில் வந்தால் நாங்கள் விரைவில எதிர்கொள்வேம். பொழுது மெல்லெனச் சென்று துறையும அடஙகிற்று. சுருக் களும திரை அடங்குதலின திரிவனவாயின. தலேவரே இன்று செலலாதீராகுக எனறு நாம் எமது குறையைக் கூற நீர் தஙகி மகிழவும இளேயாத அரிய குதிரைகள் இன்புறவும, பெருமானே! நீா அருளு வது உணடாளுல நாம் வீட்டிடததே நல்ல விருந்தகா உபசரித்தல கூடும். —உலோச்சனுர்.

## இரண்டாவது

## மணி மிடை பவளம்

## முறறும

அ

## குறிப்பு

இவ்வசனம் மூலத்தைப் படிப்பவர்களுக்கு உரை போல அமைந்துள்ளது. பெரும்பாலும் செய்யுட்களில் பயனிலை முன்பும், எழுவாய் கடைசியிலும் வருகின்றன. எழுவாய் பெரும்பாலும் வினையாலணையும் பெயராக வருகின்றது. எழுவாய் பயனிலைகளை அறிந்துகொள்ளின் செய்யுட்களின் பொருளை அறிதல் எளிது. புலவர் தான் கருதிய ஒரு பொருளைக் கூறமுன் அதற்குப் பல அடைகளையும் உவமைகளையும் நீளமாகக் கூறுவர். இவற்றைக் கருத்தில் வைத்துக்கொண்டால் செய்யுட்களின் பொருளை அறிதல் இலகுவாகும். நலம், அழகு எனப் பயின்று வரும் சொற்களில், நலம் என்பது, நுகரப்படுவது, அழகு—காணப்படுவது, சங்க நூல்களில் பயின்றுவரும் சொற்கள் பெரும்பாலும் ஓரசை ஈரசைச் சொற்களாயிருத்தல் கவனிக்கத்தக்கது. சங்க கால வழக்கிலுள்ள சொற்களையும் அவற்றின் பொருள்களையும் அறிந்துகொண்டால் சங்க நூல்களைப் பயில்தல் எளிதாகும். இப் பயன் கருதி விரைவில் வெளியிடப்படும் எமது சங்க நூல் அகராதியை எதிர்பார்க்கவும்.

The Royal Printing Works Mount Road, Madras.

**K. SUBRAMANIA PILLAI,** M.A., M L,
ADVOCATE
*Tagore Professor of Law (1920)*
(Professor of Tamil
ANNAMALAI UNIVERSITY)

16, RANGANATHA STREET,
T. N. MADRAS.

*Dated, 16—5—'40*

யாழ்ப்பாணத்து நவாலியூர்ப பெரும் புலவராகிய நவாளர் ந. சி. கந்தையா பிள்ளை அவர்கள் இயற்றிய தமிழர் திரம் என்னும் நூலானது மக்கள் தோற்றத்தைப றிய தொன்னூல்கள் பலவற்றின் ஆராய்சசிப் பயனாக எகுப்தியர், சுமேரியர், பழைய சிந்து நாட்டினர், தலிய பண்டை நாகரிக மககளின் வரலாற்றினைப் பண் டத தமிழர் வரலாற்றினோடு ஒப்பிட்டு ஆய்ந்ததின் பயனாகவும அமைந்துள்ளது கணடு பெருமகிழ்வடைந் தேன். இந்நூல எளிய தமிழ் நடையில் தக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. ஐவகை நிலமக்கள், நால்வகை மரபினர், சங்க நூற்றெய்வங்கள், பண்டைத்தொழில வகைகள், தமிழர் ஆரியர் கலப்பு என்பவற்றைப் பற்றிய அரிய கருத்துக்கள கற்பாருக்குப் புத்தறிவு பயப்பன.

இவவாசிரியரது **தமிழகம் என்னுஞ் சிறந்த நூலானது** நில நூலாராய்ச்சி, மொழி நூலாராய்ச்சி, தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சி என்பவற்றின் பெரும் பயனாகிய அரிய கருத்துக்கள் நிறைந்துள்ளது. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள், வீரம, காதல், கற்பு, சமுதாயப் பிரிவுகள், போர், கலை, மூலநூல் முதலியவற்றின் விவரங் களும சங்க இலக்கியம், பிற பெருங் காப்பியங்கள் முதலிய வறறின் சாரங்களும இதனுள இனிது விளக்கப்பட் டுள்ளன. தமிழரையும் தமிழகத்தையும பற்றி இனறி யமையாது அறிய வேண்டியவை யாவும இந்நூலுட் காணப்படும். தமிழ வாணருக்கு இது ஒரு நல்ல அறிவு விருந்தாய்த் திகழவதால தமிழுலகம இவவாசிரியருககு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

**கா. சுப்பிரமணிய பிள்ளை.**

யாழ்ப்பாணத்து நவாலியூ
ந. சி. கந்தையா பிள்ளை அ
எழுதிய நூல்கள்.

தமிழகம்
தமிழர் சரித்திரம
பத்துப்பாட்டு வசனம்
அகநானூறு வசனம் முதற் பாக
(களிற்றியானை)
அகநானூறு வசனம் இரண்டாம் பா
(மணிமிடைபவளம்)
அகநானூறு வசனம் மூன்ருவது பா
(நித்திலக் கோவை)
பதிற்றுப்பத்து வசனம்
பரிபாடல் வசனம்
புறப்பொருள் விளக்க வசனம்
அறிவுரைமாலை
அறிவுரைக்கோவை
கலித்தொகை வசனம்
கலிங்கத்துப்பரணி வசனம்

ஆர். பி. சேதுப் பிள்ளை, பி.எ
அவர்கள் எழுதிய நூல்க

சிலப்பதிகார விளக்கம்
சிலப்பதிகாரக் கதை
தமிழ் நாட்டு நவமணிகள்
ராஜ ராஜன் (மணி. திருநாவுக்
முதலியார்)
சுந்தரர் (தொழுவூர் வேலாயுத முதலி
தேம்பாவணி வசனம்
விநோதச் சரித்திரம்